


*Madras Government Oriental Series*

No. 1

# KAPPAL SĀTTIRAM

# கப்பல் சாத்திரம்

Madras Government Oriental Series

*Published under the authority of*
*the Government of Madras.*



*General Editor:*
T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
**Curator, Government Oriental Manuscripts Library, Madras.**

உ

No. I

# கப்பல் சாத்திரம்

# KAPPAL SATTIRAM

Critically edited with Introduction

BY

T. P. PALANIYAPPA PILLAI, B. O. L.

Sri Venkateswara Oriental Institute, Tirupati



GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS

Price: Rs. 1-10-0

1950

# INTRODUCTION

The Government of Madras took up for consideration the question of publication of the various manuscripts in different languages on subjects like Philosophy, Medicine, Science etc., early in May 1948. Important Manuscript Libraries in the Madras Presidency were requested to send a list of unpublished manuscripts with them for favour of being considered by the Government for publication. The Honorary Secretary of the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Tanjore, alone complied with this request. This list as well as a similar list of unpublished manuscripts in the Government Oriental Manuscripts Library, Madras, were carefully examined and a tentative selection of manuscripts suitable for publication was made. The Government in their Memorandum No. 34913/48-10, Education, dated 4-4-1949 constituted an expert Committee with the Curator of the Government Oriental Manuscripts Library, Madras, as the Secretary, for the final selection of manuscripts suitable for printing and for estimating the cost of publication. The following are the members of the Committee.

1. Sri T. M. Narayanaswamy Pillai, M.A., B.L.,
2. ,, R. P. Sethu Pillai, B.A., B.L.,
3. ,, C. M. Ramachandra Chettiar, B.A., B.L.,
4. ,, R. Krishnamoorthy, (Kalki),
5. Dr. N. Venkataramanayya, M.A., Ph.D.,
6. Sri M. Ramanuja Rao Naidu, M.A. L.T.,
7. ,, V. Prabhakara Sastri,
8. ,, N. Venkata Rao, M.A.,
9. ,, H. Sesha Ayyangar,
10. ,, Masthi Venkatesa Ayyangar, M.A.,
11. ,, M. Mariappa Bhat, M.A., L.T.,
12. Dr. C. Achyuta Menon, B.A., Ph.D.,
13. ., C. Kunhan Raja, M.A., D. Phil.,
14. ,, A. Sankaran, M.A., Ph.D., L.T.,
15. Sri P. S. Rama Sastri,
16. ,, S. K. Ramanatha Sastri,
17. Dr. M. Abdul Haq., M.A., D. Phil, (Oxon).
18. Afzul-ul-Ulama Hakim Khadar Ahamed,
19. Sri P. D. Joshi,
20. ,, S. Gopalan, B.A., B.L.,
21. ,, T. Chandrasekharan M.A., L.T.

The members of the Committee formed into Sub-Committees for the various languages, Sanskrit, Tamil, Telugu, Kannada, Malayalam, Mahrathi and Islamic Languages. They met during the month of May 1949 at Madras and at Tanjore to examine the manuscripts and make a selection. The recommendations of the Committee were accepted by the

5. a. Auṣadhagaḷu.
   b. Vaidyaviṣaya.
6. Sangīta Ratnākara.
7. Sūpaśāstra.

### ISLAMIC LANGUAGES

1. Jamil-al-Ashya.
2. Tibb-E-Faridi.
3. Tahqiq-Al-Buhran.
4. Safinat-Al-Najat.

## "B" From the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Tanjore.

### TAMIL

1. Sarabhēndra Vaidya Muṟai. (Diabetes).
2. —Do— (Eyes).
3. Agastiyar 200
4. Koṅkaṇarśarakku Vaippu.
5. Tiruccitrambalakkōvaiyār, with Padavurai.
6. Kālacakram.
7. Tālasamudram.
8. Bharatanāṭya.
9. a. Pāndikela Vilāsa Nāṭakam.
   b. Purūrava Cakravarti Nāṭakam.
   c. Madana Sundara Vilāsa Nāṭakam.
   d. Percy Macqueen's Collection in the Madras University Library on Folklore.
10. Rāmayyan Ammānai.
11. Tamil Pāḍalkaḷ including Paṭṭiṇattār Veṇbā and Vaṇṇaṅkaḷ.

### TELUGU

1. Kāmandakanītisāramu.
2. Tāladaśāprāṇapradīpikā.
3. a. Raghunātha Nāyaka Abhyudayamu.
   b. Rājagōpāla Vilāsamu.
4. Rāmāyaṇamu, by Kaṭṭa Varadarāju.

### MAHRATHI

1. Nātyaśāstra Saṅgraha.
2. a. Book of Knowledge.
   b. Folk Songs.
   c. Dōrā Darūn Vēṇi Paddhati.
   d. Āśvāsa Catula Dumaṇi.
3. a. Pratāpasimhēndra Vijaya Prabandha.
   b. Śarabhēndra Tīrthāvaḷi.

5. a. Auṣadhagaḷu.
   b. Vaidyaviṣaya.
6. Saṅgīta Ratnākara.
7. Sūpaśāstra.

## ISLAMIC LANGUAGES

1. Jamil-al-Ashya.
2. Tibb-E-Faridi.
3. Tahqiq-Al-Buhran.
4. Safinat-Al-Najat.

## "B" From the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Tanjore.

### TAMIL

1. Sarabhēndra Vaidya Muṛai. (Diabetes).
2. —Do— (Eyes).
3. Agastiyar 200
4. Koṅkaṇarśarakku Vaippu.
5. Tiruccitṛambalakkōvaiyār, with Padavurai.
6. Kālacakram.
7. Tālasamudram.
8. Bharatanāṭya.
9. a. Pāndikela Vilāsa Nāṭakam.
   b. Purūrava Cakravarti Nāṭakam.
   c. Madana Sundara Vilāsa Nāṭakam.
   d. Percy Macqueen's Collection in the Madras University Library on Folklore.
10. Rāmayyan Ammānai.
11. Tamil Pāḍalkaḷ including Paṭṭiṇattār Veṇbā and Vaṇṇankaḷ.

### TELUGU

1. Kāmandakanītisāramu.
2. Tāladaśāprāṇapradīpikā.
3. a. Raghunātha Nāyaka Abhyudayamu.
   b. Rājagōpāla Vilāsamu.
4. Rāmāyaṇamu, by Kaṭṭa Varadarāju.

### MAHRATHI

1. Nātyaśāstra Saṅgraha.
2. a. Book of Knowledge.
   b. Folk Songs.
   c. Dōrā Darūn Vēṇi Paddhati.
   d. Āśvāsa Catula Dumaṇi.
3. a. Pratāpasimhēndra Vijaya Prabandha.
   b. Śarabhēndra Tīrthāvaḷi.

c. Lāvaṇi.

4. Dēvēndra Kuṛavanji.
5. Bhakta Vilās.
6. Ṣlōka Baddha Rāmāyaṇa.

## SANSKRIT

1. Aśvaśāstra with Tricolour illustrations.
2. Rājamṛgānka.
3. Cikitsāmṛtasāgara.
4. Āyurvedamahodadhi.
5. Gītagovinda Abhinaya.
6. a. Colacampu.
   b. Sahendra Vilāsa.
7. Dharmākūtam - Sundara Kāṇḍa.
8. Jātakasāra
9. Viṣṇutattvanirṇayavyākhyā.
10. Saṅgīta Darpaṇa.
11. Bījapallava.

It is hoped that the publication of most of the important manuscripts will be completed within the next four years.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the Library and consequently the mistakes that are found in them could not be corrected by comparing them with other copies. The editors have, however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets and correct readings have been suggested in square brackets. When different readings are found, they have been given in the foot notes except in the case of a few books in which the correct readings have been given in the foot note or incorporated in the text itself.

The Government of Madras have to be thanked for financing the entire scheme of publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee who spared no pains in selecting the manuscripts for publication. I have also to thank the various editors, who are experts in their own field, for readily consenting to edit the manuscripts and see them through the Press. The various Presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

The present edition is based on the following manuscripts :—

1. A paper manuscript with the Govt. Oriental Manuscripts Library, bearing D. No. 1996, 11 1/8 × 8½ inches in size and consisting of 79 pages having 18 lines in a page. It is in Tamil characters. This manuscript contains astrological matter relating to ships at the end Prognostication about Ships with five birds for symbols is also explained.

2. A paper manuscript with the Government Oriental Manuscripts Library $13\frac{1}{2} \times 8\frac{1}{2}$ inches in size and containing 62 pages of 26 lines to a page. The manuscript is in an injured condition. It is described under D. No. 1997. The manuscript is in Tamil characters.

Reference is to be made to the good work done by Sri V.R. Kalyanasundaram, Pandit of this Library for going through the proofs.

Govt. Oriental Manuscripts Library, Madras - 5.

T. CHANDRASEKHARAN,
*Curator*
**and**
*General Editor, Madras Govt. Oriental Series.*

# கப்பல் சாஸ்திரம்

## முகவுரை

உலக மாந்தர் தம் உலக வாழ்க்கையில் அறிந்துகொள்ள வேண்டியவையும் கைக்கொள்ள வேண்டியவையும் பொதுவாக வித்தைகள் என்றும் கலைகள் என்றும் கூறப்படுகின்றன. இவ்வாறு பாகுபாடு செய்து உரைப்பது வடமொழியாளர் வழக்கு. வடமொழியில் சிறந்த நூல் ஆகிய சுக்கிர நீதி என்பது 4-வது அத்தியாயம் 3-வது பிரகரணம் - வித்யாகலா நிரூபணம் என்ற பிரிவதனில் "மாந்தர் உலக வாழ்வில் அறியவேண்டுபவை அளவில்லாதன: என்ருலும் வித்தைகளும் கலைகளும் இன்றி யமையாதவை. இவற்றுள் வித்தைகள் முப்பத்திரண்டு ஆகும், கலைகள் அறுபத்திநான்கு ஆகும்" என்று பாகுபாடு காட்டி இவற்றின் இயல்புகளை விரித்துச் செல்லுகிறது "எக்காரியம் சொல்லளவான் முற்றும் நன்கு நிறைவேற்றத் தக்கதோ அது வித்தை என்னும் பெயராற் கூறப்படும். எக்காரியம் பேசும் ஆற்றல் இல்லாத ஊமனும் செய்தற்குத் தக்கதாக உள்ளதோ அது கலை என்னும் பெயரால் கூறப்படும்" என்று விவரணம் செய்துள்ளது.

வித்தைகளை விரித்துக் கூறும் முகத்தால் இருக்கு முதலிய வேதம் நான்கு, ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், தந்திரங்கள் ஆகிய உபவேதம் நான்கு; சிக்கை, வியாகரணம், கற்பம், நிருக்தம், சோதிடம், சந்தசு, ஆகிய வேதாங்கங்கள் ஆறு, மீமாஞ்சை, தருக்கம், சாங்கியம், வேதாந்தம், யோகம், இதிகாசம், புராணம், தருமசாஸ்திரம், நாஸ்திகம், அர்த்தசாஸ்திரம், காமசாஸ்திரம், சிற்பம், அலங்காரம், காவியம், தேசபாஷை, அவசரோக்தி (அமயச்சொல்) யவனமதம், ஒப்புறவறங்கள் ஆகிய பதினெட்டுடன் சேர முப்பத்தி ரண்டு வித்தைகள் எனக் கூறியது.

இதன்மேல் கலைகள் அறுபத்துநான்கினை விரித்துரைக்கும் முகத்தால், கீதம், வாத்தியம், நிருத்தம் முதலிய காந்தருவக் கலைகள் ஏழும், ஆயுர்வேதக் கலைகள் பத்தும், தநுர்வேதக் கலைகள் ஐந்தும், தந்திர கலை ஒன்றும் ஆக இருபத்துமூன்று கலைகளின் தன்மை கூறிப் பின்னர் பொதுவாக எல்லாத்திறத்து மக்களும் கைக்கொள் ளும் கலைகளின் வகையாக நாற்பத்தொரு திறம் கூறியுள்ளது. இவற் றுள் தேர் செலுத்தல், யானை, குதிரை நடை கற்பித்தல், மண், மரம்,

கல், பொன், வெள்ளிப்பாண்டம் செய்தல், ஓவியம் வரைதல், ஊருணி, வாவிமாளிகை சமைத்தல், நாழிகை வட்டில் கருவி செயல், மிகை, குறை, சமன் விகற்ப வண்ணம் ஆடைக்கு ஏற்றல், நீர் நெருப்புக் காற்றுச் சேர்க்கை, தடைப்படுத்தல், கருவித்தொழில் இவைகளை விவரித்து முப்பத்துநாலாவது கலைவகையாகத் தோணி தேர் முதலிய செய்தல் அறிவு ஒரு கலையாகும் என்று கூறியுள்ளது.

இதன்பின்னர் நூல்நூற்றல், கயிறு முறுக்கல், நெசவு, சாணை, உலோகம், மணி சோதனம், உலோகக் கலப்பு, போலி மணியாக்கம், அணிகலன் செய்தல், மூலாம் பூச்சு, தோல் பதனீடு, பால் கறத்தல், தையல் செய்தல் முதலிய தொழில்வகைகளை எல்லாம் கூறி முடிக்கின்றது. இவற்றை நோக்கின் மக்கள் கைக்கொள்ளுதற்கு உரிய பொதுக் கலைகளும் நூல்களில் அமைந்திருந்தன என்பதும், இவைகள் பன்னூறு ஆண்டுகளாக நம் நாட்டில் நடைபெற்றுவந்தன என்பதும் தெளிய அறியலாகும். இப்பொதுக் கலைகளுள் தோணி செய்தல் ஒன்று ஆகப் பண்டையோர் வகுத்திருந்தனர் என்பதும், அது நூல் மரபுடன் நடைபேற்றிலிருந்தது என்பதும் இங்கு அறியத்தக்க செய்தியாம்.

சுக்கிர நீதி சாஸ்திரம் இவ்வாறு கூறியதுபோலவே வடமொழியிலுள்ள அருத்த சாஸ்திரம், காம சாஸ்திரம் முதலிய பெரு நூல்களும் கலைகளின் திறங்களைப்பற்றிக் கூறுகின்றன. இவ்வித்தைகள் கலைகளின் திறங்களை விவரித்துக் கூறும் வடமொழி நூல்கள் பலவும் ஏட்டுச் சுவடிகளாக நம் நாட்டிற் பலவிடங்களிலும் உள்ளன. நம் தென்னாட்டில் சென்னை மாகாண அரசாங்கத்தார் கீழ்க்கலைப் பஞ்சுசுவடி நூல்நிலையத்திலும் தஞ்சை யரசர் சரபோசி மகாராஜா சரசுவதிமால் நூல்நிலையத்திலும் ஏறத்தாழ அறுபத்தையாயிரம் உள்ளன.

இங்குக் கூறிய வித்தைகள் கலைகள் என்ற பாகுபாட்டின் படித் தென்னாட்டு மொழிகள் ஆகிய தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்ற திராவிட மொழிகளில் பழங்காலத்து ஏட்டுச்சுவடிகள் காணப்படவில்லை. இம்மொழிகளிற் காணும் பழஞ்சுவடிகள் பெரும்பாலும் இலக்கணம், இலக்கியம், மருத்துவம், சோதிடம், சமய சாஸ்திரம், காவியப் பிரபந்தங்கள் என்ற பகுப்பு உடையனவாகவே உள்ளன. இப்பாகுபாட்டுடன் நம் தமிழ் மொழிக்குரிய பழைய ஏட்டுச் சுவடிகள் நம்நாட்டுப் பழஞ்சுவடி நூல்நிலையங்களில் ஏறத்தாழ ஆறுயிரமே உள்ளன. தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் இத்தொகை இதனினும் சற்றுக் குறைவேயாகும்.

நம் தமிழ்மொழியில் ஒரோ வழி சிற்பநூல், மனைநூல், கிணற்று நூல், கணிதம் என்பன கேட்கப்படினும் பொதுக் கலைநூல் ஆகிய 'தோணி செய்தல்' என்பது வடமொழியுட்போல இதுவரையில் தமிழின்கண் இருந்த செய்தி கேள்வியில் எய்தியது இல்லை. அண்மையில் சென்னையரசாங்கத்துக் கீழ்க்கலைப் பழஞ்சுவடி நூல்நிலையத்துத் தமிழ்த் தொகுதியில் பொதுக்கலை பற்றிய நூல் வெளியீடு செய்ய நாடிய காலை மிக அரும்பேறாக்க் 'கப்பல் சாஸ்திரம்' என்ற தமிழ்ச் சுவடி ஒன்று காணப்பட்டது. இது முந்நூறு ஆண்டுகட்கு முன்பு எழுதப்பட்டதென்பது இதிற் சுட்டிய காலக்குறிப்பு காட்டுகின்றது. இது ஒரு பொதுக்கலை நூலாக விருக்கவும், இதன் முன்பகுதி பாட்டும் உரையும் ஆக அமைந்து எஞ்சியபாகம் உரைநடையாக இருக்கின்ற தன்மையால் இக்கலையைத் தமிழ்மக்கள் போற்றுதற்கண் மிக்க நோக்கம் கொண்டிருந்தனர் என்பது தெரிகின்றது. ஆதலால் இதன் அருமைத் திறத்தைக் கருதித் தமிழ்மக்கள் கையின்கண் எய்துவித்தற் பொருட்டு இஃது இப்போது அச்சில் பதிப்பிக்கப் பெறுகின்றது.

இந்நூல் ஏட்டுச்சுவடியின் தொடக்கத்துள்ள வாக்கியம் சில அரிய செய்திகளைத் தெரிவிக்கின்றது. அவை நம் தமிழ்நாட்டின் வரலாற்றுப் பகுதியைச் சேர்ந்தவையாதலால் அவற்றை முறையாய் நோக்குவோம்.

"கப்பல் சாஸ்திரத்தைப்பற்றி யெசமானர்கள் உத்தாரப் படிக்குத் தயங்கம்பாடியில் முதன்மையாக 1620ஷு தினமாரக்காரது பாசியான காலங்கிய ராயப்பிள்ளை வீட்டில் அவாள் வர்க்கத்தார் கையிலிருந்து மனராசி பண்ணி வெளிப்படுத்தி வாங்கின கப்பல்கள் வைப்பிக்கிற சாஸ்திரத்தைப் பார்த்துச் சரியாகத் திருப்புகிற புஸ்தகம்" என்று ஏடு தொடங்குகின்றது.

இங்குத் 'தயங்கம்பாடி' என்று குறித்துள்ள ஊர், சோழ நாட்டில் தஞ்சாவூர்ச் சில்லா மாயவரம் தாலுகாவில் மாயவரத்துக்குக் கிழக்கே கடற்கரையில் உள்ள பட்டினம் ஆகும். 'தரங்கம்பாடி' எனத் தமிழிலும் 'Tranquebar' என்று ஆங்கிலத்திலும் வழங்குவது இவ்வூரே. கடற்கரையில் அலைமோதும் எல்லையுள் சிவன் கோயில் ஒன்றும் பழங்காலக் கட்டடங்கள் சிலவும் கொண்ட ஊராக உள்ளது. சிவன் கோயிலில் உள்ள மூன்று கல் வெட்டுக்கள் நமக்குப் பழைய வரலாறுகளைக் காட்டுவனவாயுள்ளமையால் அவற்றைக் கீழே தருகின்றேன்.

1. "ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீ மத்கிதகிக்கு மேல் கோமாறபர்மர் திருபுவந சக்கரவத்திகள் ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்டு 307-வது சித்திரைமாதம் முதல் சடங்கன்பாடியாந குலசேகரன் பட்டினத்து உடையார்மணி வண்ணீசுர முடையார்க்கு வீரகற்பகன் சன்தியமுது செய்தருள பதினெண் விஷயத்தாரும் கரையாரும் நிச்சயித்தபடி இவ்வூர் நாலு வேலிக்கும் உள்பட்ட மனையால் மாதம்தொறும் இருநாழி அரிசி தண்டிக்கொள்ளக் கடவதாகவும். தண்டும் இடத்து இதுக்குத் தாழ்வு சொன்னருண்டாகில் பதினெண்மிஷயத்துக்கும் கரையாற்றுக்கும் துரோகியாகக்கடவர்களாகவும். இப்படிக்கு பதினெண்மிஷயத்தாரும் கரையாரும். ஓம் சுபமஸ்து. 2".

2. "சாலிவாகன சகாபித்தம் 1715 கலியுகாபித்தம் 4884 இதன் மெல்செல்லா நின்ற சொபகிறுது௵ ஆவணிமீ 30௳ சுக்கிர வாரமும் உத்திரட்டாதி நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில் மாசிலா மணியீசுவர சுவாமி சன்ன(தி)து சதம்பமும் தளவிசையும் சேனைக் குடை சுப்பிரமணிய செட்டியார் குமாரன் ஆபதுத்தாரண செட்டியார் செய்து வைத்த தற்மம் நித்தியம் சதாசெற்வை.

3. "பிறபவ ௵ கார்த்திகை மீ 20௳ சிறிமது அச்சுதப்ப நாயிக்கர் அய்யன் காரியத்துக் குகத்தரான சடங்கம்பாடி இராமையர் அய்யன் மாசிலாமணி மாதம் பிராணற்கு பூசை திருப்பணிக்குச் செத்த திருநாமத்துக்காணி தில்லையாளி நிலம் நால்வேலி அளம் சந்திரப்பாடி கொட்டை செணக்கைய்க்கொளர் தெருவும் காங்கையன் உள்ப்பாட்டாரும் அடைப்பன் நல்ல காத்தாங் உள்பட்டாரும் பாக்கு சுவந்திரம் பொக்கயம் உள்ப்பட அமணத்துக்கு மூன்று மரப்பணமும் கந்த, "........................................." இம்மூன்று கல் வெட்டுகளும் தென்னிந்திய சிலாசாஸனத் தொகுதி நான்காவது—பக்கம் 120-ல்—399, 400. 401 என்ற எண்ணுள்ளனவாகப் பதிப்பிக் கப்பட்டுள்ளன. இவை அச்சிவன் கோயில் சுவரிலும், முற்றத்திலும் தனிக் கல் ஒன்றிலுமாக உள்ளன. முதற் கல்வெட்டிலும் மூன்றாவது கல்வெட்டிலும் இவ்வூர்ப் பெயர் 'சடங்கன்பாடி' என்றே உள்ளமை காண்க. அன்றியும் முதற் கல்வெட்டில் பாண்டிய மன்னன் ஆகிய கோமாறவர்மன் திரிபுவன சக்ரவர்த்தி ஸ்ரீ குலசேகர பாண்டியன் ஆட்சியின் 37-வது ஆண்டு குறிக்கப்பட்டு இவ்வூருக்குக் குலசேகர பட்டிணம் என்ற பிறிதொரு பெயர் வழக்குண்மை குறித்துள்ளமை யால் இவ்வூர்—கி. பி. 14-வது நூற்றாண்டில் பாண்டிய மன்னர் ஆட்சி யில் இருந்தமையும் அக்காலத்துச் 'சடங்கன்பாடி' என்ற பழம்

பெயரோடு பாண்டிய மன்னன் திருப்பெயரோடு சார்ந்த புதுப் பெயர் பூண்டமையும் விளங்குவது கண்டு கொள்க. ஆகவே முன்பு அமைந்த சோழராட்சிக் காலத்திலும் இடையே ஏற்பட்ட பாண்டியர் ஆட்சிக் காலத்திலும் பின்னர் கி. பி. 16-வது நூற்றாண்டில் ஏற்பட்ட தஞ்சை நாயக்கர் ஆட்சிக் காலத்திலும் இவ்வூர் பழைய 'சடங்கன்பாடி' என்ற பெயரே பெற்று நிலவியது என்பதும் பின்னர் கடல் நீரேற்றத்தால் கடலலைச் சார்பு மிக, அணுக்கத்தில் அமையப் பிற்காலத்தில் சிலர் "தரங்கம்பாடி" என்ற புதுப் பெயர் இட்டு வழங்க அது பற்றி வேறாய் அமைந்த தென்றும் தெளிந்து கொள்ளலாம். எனினும் இந்த ஏட்டினை எழுதியவர் தமிழ் மொழியறிவு நன்கு நிரம்பாதவராதலால் இப்பெயரைத் தானும் பிழைபடத் "தயங்கம்பாடி" என்று எழுதி வைத்துள்ளார். இவ்வகையாகத் தமிழ் நாட்டு ஊர்களின் பெயர் மருவுமுறை காலப் போக்கால் நேர்ந்தது ஆகும்.

இனி இங்குள்ள கோயிலில் எழுந்தருளியுள்ள சிவலிங்கப் பெருமான் திருப் பெயர் முதலாவது பாண்டிய சாசனத்தில் 'மணி வண்ணீசர்' என்றும் வழங்கியது என்பதும் அறிந்து கொள்க. காலப்போக்கில் திருக்கோயில் திருவுருவின் பெயரும் மாற்றம் உற்றமை நோக்கிக் கொள்க. இத்திருக் கோயிலின் பெயர் சிவலிங்கப் பெருமான் திருப் பெயர் காரணமாக 'மணி வண்ணீசுரம்' என வழங்கிய தன்மையும் காண்க.

மேற்கண்டவாற்றால் பலநூற்றாண்டாகச் சிவஸ்தலமாக விளங்கிய இவ்வூரில் இத்தமிழ் நாட்டு மக்களின் வேறாகப் புறநாட்டு மக்களின் வாழ்க்கையும் அப்பழங் காலத்தில் ஏற்பட்டது என்பதற்குரிய சான்றுகள் சிலவும் அக்கடற் கரையில் உள்ளன. அவற்றால் இவ்வூர் புதிய வரலாறு தெரியவருகின்றது. அவற்றைக் கீழே காட்டுகின்றேன். கடற்கரையில் சிவன் கோயிலுக்குத் தென்பால் ஒரு பழங் கோட்டை கொத்தளத்துடன் உள்ளது. அதில் உள்ள எழுத்து ஆவது :—

THE DANSBORG
BUILT BY
**OVE GEDDE**
COMMANDER IN THE
ROYAL DANISH NAVY
Circa 1620

மற்றுக் கடற்கரையை யடுத்துள்ள ஒரு நடு கல்லில் கீழ்வரும் எழுத்துள்ளது

1706—1906
Here by the Grace of God
Landed on the of July 1706
The First Ev. Lutheran Missionaries
to India
Bartholomaus Ziegenbalg
and
Heinrich-Plutschau

Erected by the grateful congregations
Of the Leipzig Ev. Luth. Mission
In the Jubilee Year 1906.

முதலாவது கோட்டை முகத்திற் சுவரில் அமைந்த ஆங்கில வாசகம் " கி. பி.—1620-ம் ஆண்டளவில் டென்மார்க்கு (Denmark) தேச அரசனுடைய கப்பற் படைத் தலைவன் ஆகிய " ஓவே கெட்டே " என்பவரால் கட்டப்பட்ட டேனஸ் கோட்டை இது " என்று தெரிவிக்கின்றது.

இரண்டாவது நடுகல் ஆங்கில வாசகம் காட்டும் செய்தியாவது : கி. பி. 1706-ம் ஆண்டு ஜூலை மாதம் கடவுளின் திருவருளாலே இந்தியாவுக்கு முதல் லூதரன் கிறிஸ்து மதப் பிரசாரகர்கள் ஆகிய 'பார்த்தலோமஸ் ஜீகன் பால்கு என்பவரும் இவ்விடத்தில் கப்பலினின்றும் இறங்கித் தங்கினார்கள். நூற்றாண்டு விழா ஆன்டாகிய கி. பி. 1906-வதில் 'லீப்ஜீக்' நகரத்து கிறிஸ்துவ லூதரன் மதப் பிரசாரகச் சங்கத்தார்களின் நன்றியறிதல் ஆக இது நிறுவப்பட்டது " என்பதாகும்.

முதலாவது எழுத்துச் செய்தியாவது .— ஏறத்தாழ முந்நூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ஐரோப்பா கண்டத்துள்ள 'டென் மார்க்குத் தேசத்து மன்னன் ஆணையினால் அவன் கப்பல் படைத் தலைவன் ஆகிய 'ஓவே கெட்டே' என்ற ஐரோப்பியன் தன்னாட்டினின்று இந்தியாவுக்கு வந்து தென்னாடாகிய நமது தமிழகத்தின் கீழைக் கடற்கரைப் பட்டினத்தில் கடற்கரையிடத்தே ஒரு கோட்டை கட்டித் தங்கினான் என்பது புலப்படுகின்றது.

இரண்டாவது கல்லெழுத்துச் செய்தியாவது :— முன் குறித்த ஆண்டிற்குப் பின்பு எண்பத்தாறு ஆண்டுகள் கழிந்த அளவில் ஐரோப்பாக் கண்டத்து "டென்மார்க்குத் தேசத்துக் கிறிஸ்து மதப்

பிரசாரகர்கள் ஆகிய ஹாதரன் சமய சங்கத்தார் இருவர் தமிழ் நாட்டுப் பழமையான ஊர் ஆகிய சடங்கன்பாடிக் கடற்கரையில் இறங்கினர் கள் என்றும் அவர்களும் அவர்கள் வழியினர்களும் இவ்வூரில் தமது கிறிஸ்து மத போதனையை நடத்தி அச்சமயம் இங்கு நிலை பெறச் செய்தனர் என்றும் அவர்கள் தொடர்ந்து ஆற்றிய கிறிஸ்து சமயப் பணியைப் பாராட்டி அந்நன்றியறிவு காட்டுதல், ஆக இருநூறுவது ஆண்டில் கொண்டாட்ட விழா நடத்திக் கல் நிறுத்தினர்கள் என்றும் குறித்துள்ளது.

இவ்விரண்டு புறநாட்டுப் பழைய எழுத்துக்களினுலும் நாம் அறிய வந்த செய்திகளை மேலும் தெளிவித்தற்குரிய பழைய ஆராய்ச்சி ஒன்றும் நாம் நோக்கிக் கொள்ளுதல் வேண்டும். நம் சென்னை மாகாண அரசாங்கத்துப் பழஞ்சாசன ஆராய்ச்சியாளராக உத் யோகம் பெற்றுப் பழஞ் சாசன இலாகா தலைவராக இருந்த டாக்டர்—E. உல்ஷ் P. H. D. (Dr Hulf) என்பவர் 1893-ம் ஆண் டில் இந்தியப் பழமை ஆராய்ச்சித் தொகுதி (Indian Antiquary) இருபத்திரண்டாவதில் "தரங்கம்பாடி டேனிஷ் நாணயங்கள்" என்று தலைப்பிட்டு எழுதிய கட்டுரைப் பொருள் இங்கு மொழி பெயர்த்துத் தருகின்றேன்: காண்க.

"தரங்கம்பாடி என்பது தஞ்சாவூர் சில்லாவிலிருந்து 18 கல் தொலைவில் கடற்கரைப் பட்டிணமாக உள்ளது. அங்கு உள்ள ஒரே இந்துக் கட்டடம் ஒரு சிவாலயமாகும், அதன் ஒரு பாகம் கடல் அலை மோதும் எல்லையது. அதனுள் மூன்று சாசனங்கள் உள்ளன. முத லாவது பாண்டிய மன்னன் கோமாறவர்மன் திரிபுவன சக்ரவர்த்தி குலசேகர தேவனுடைய ஆட்சி முப்பத்தேழாவது ஆண்டுக் கல் வெட்டு: இரண்டாவது. தஞ்சாவூர் நாயக்கமன்னர் நால்வருள் இரண்டாவது அச்சுதப்ப நாயக்கர் காலத்துக் கல்வெட்டு கி. பி.— 1627—ம் ஆண்டுக்கு ஒத்தது. மூன்றுவது கி. பி.—1783-ஆண்டுக் கல்வெட்டு: பின்னை இரண்டு கல் வெட்டுகளும் அக்கோயிலை மாசிலா மணியீசுவரம் என்று கூறுகின்றன: ஆனல் முதலாவது மணிவண் ணீசுவரம் என்கின்றது. தரங்கம்பாடியைச் சடங்கன் பாடியான குல சேகர பட்டிணம் என்கின்றது. இக்காலத் தமிழ்ப் பெயர் ஆகிய தரங்கம்பாடி (அலைப் பட்டிணம்) என்பது குலசேகரன் கல்வெட்டில் உள்ள சடங்கன்பாடி என்பதன் மரூஉப் பெயராகத் தெரிகிறது. இடைக் காலமரூஉ வடிவு ஆகிய தடங்கன்பாடி என்பது இரண் டாவது கல்வெட்டின் 4—5—வது வரிகளுக்கு இடையில் பொறிக்கப்பட்டுள்ளது தெரிந்துள்ளது.

"ஐரோப்பிய சிற்ப முறையில் அமைந்த குடிப்போன பல கட்டடங்களும், 'டேன்ஸ்பர்க்' கோட்டையும் கல்லறையில் டேனிஷ் காரர் பெயர் பொறித்த சமாதிக் கல்லுகளும், பார்ப்போருக்கு இந்தப் பழைய இந்தியப் பாம்பி (Pompei) நகரினை நினைப்பூட்டுவதாம். இது டேனிஷ் குடியேற்றத்தார் ஆட்சி நிலையமாயிருந்தது. கி. பி. 1616-ம் ஆண்டில் கிறிஸ்டியன் IV மன்னன் ஆட்சிக்காலத்தில் டேனிஷ்காரர் கள் கிழக்கு இந்திய வியாபாரக் கம்பனி ஒன்றை ஏற்படுத்தினார்கள். 1618-ம் ஆண்டு ஆகஸ்டுமாதம் டென்மார்க்கு தேசத்தைவிட்டுப் புறப் பட்ட அவர்கள் முதற்கப்பல் ஆகிய 'ஓரேசண்டு (Oeresund) பிறப்பால் டச்சுக்காரன் ஆகிய 'ரீலெண்ட் கிரேப்' (Roelent Crape) என்பான் தலைமையிற் சென்றது. சோழமண்டலக் கடற்கரைப் பக்கத்தில் போர்த்துக்கேசியரால் தாக்கப்பட்டு அழிந்தது. உயிர்தப்பிய மாலுமித் தலைவன் மற்றும் பதின்மூன்று மாலுமிகளோடு தஞ்சாவூர் அரச சபையை அடைந்தான். 1618-ம் ஆண்டு நவம்பர்மாதம் டேனிஷ் பிரபு ஆகிய 'ஓவே கெட்டே' (Ove Gedde) என்பான் தலைமையில் தம் நாட்டினின்று வேறு ஐந்து கப்பல்கள்புறப்பட்டன. 'கிரேப்' (Crape) என்பானும் 'கெட்டே' (Gedde) என்பானும் சேர்ந்து செய்த முயற்சி யால் தஞ்சாவூர் நாயக்க மன்னன் ஆகிய அச்சுதப்பனுக்கும் டென் மார்க்குத் தேசத்துக்கும் ஓர் உடன்படிக்கை 1620-ம் ஆண்டு நவம்பர் மாதம் முடிவு எய்தியது. இந்த உடன்படிக்கையால் நாயக்க மன்னன் தரங்கம்பாடியையும் அண்மையிலுள்ள பதினைந்து சிற்றூர்களையும் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 4000/- கப்பப்பொருளுக்கு ஆக டேன்ஸ்காரர் களுக்குச் சேர்ப்பித்தான். டேன்ஸ்பர்கு (Danesborg) கோட்டைக்கு அஸ்திவாரம் போட்டுவிட்டுக் 'கெட்டே' டென்மார்க்குத் தேசத்துக்குத் திரும்பினான். கிரேப் (Crape) என்பான் புதிய குடியேற்ற ஊருக்குத் தலைவனாக அமர்ந்தான். கி. பி. 1808-ம் ஆண்டினின்று 1814-ம் ஆண்டு வரை ஏற்பட்ட இடையீடு ஒன்று ஒழிய டேன்ஸ்காரர்கள் இரு நூறாண்டுகள் தரங்கம்பாடியில் குடிகொண்டிருந்தார்கள். பின் 1845-ம் ஆண்டில் அதனைப் பிரிட்டிஷார் விலையாகப் பெற்றார்கள். அக்காலந் தொட்டு, தரங்கம்பாடியின் வியாபாரப் பெருமை டச்சுக்காரர் கடற் றுரைப் பட்டினம் ஆகிய நாகபட்டினத்துக்கு மாறியது என்று எழுதியுள்ளார் என்பது.

இவ்வரலாற்றுக்குப் பின்பு டென்மார்க்கு தேச மன்னர்கள் ஆகிய 1. கிறிஸ்டியன் IV (கி. பி. 1588—1648), 2. பிரடெரிக் III (கி. பி. 1648—1670), 3. கிறிஸ்டியன் V (கி. பி. 1670—1699), 4. பிரடெரிக் IV (கி. பி. 1699—1730), 5. கிறிஸ்டியன் VI (கி. பி. 1730—

1746), 6. பிரடெரிக் V (கி. பி. 1746—1766), 7. கிறிஸ்டியன் VII (கி. பி. 1766—1808), 8. பிரடெரிக் VI (கி. பி. 1808—1839), 9. கிறிஸ்டியன் VIII (கி. பி. 1839—1848)—என்ற ஒன்பது மன்னர் களின் காலத்து நாணயங்கள் பல தரங்கம்பாடியில் வழங்கின என்று காட்டியுள்ளார்.

வில்லியம் வில்சன் ஹண்டர் (William Wilson Hunder) என்பார் ‘இந்திய சாம்ராஜ்ஜிய கெஜட்டியர்’—தொகுதி 11-ல் (Imperial Gazetteer of India) - (Vol xiii) தரங்கம்பாடியின் வரலாறு ஆகத் தேனிஷ்காரர் இருநூற்றாண்டாகக் குடியேற்றம் பெற்றிருந்த தனை எடுத்துக்கூறி அவர் கிறிஸ்துமத போதனைக்காக மேற்கொண்ட முயற்சித் திறங்களைக் கீழ்வருமாறு குறித்துள்ளார்.

“இந்தியாவில் முதல் புரோடெஸ்டெண்டு மத பிரசாரகர்கள், தரங்கம்பாடி என்ற டேனிஷ் குடியேற்ற ஊரில், டென்மார்க்கு தேச அரசர் ஆதரவில் கி. பி. 1705-ம் ஆண்டு பிரசார வேலை தொடங்கிய லூதர்மிஷன் போதகர்கள் ஆகிய ‘ஜீகன் பால்கும், புளூட்ஸ்சௌ’வும் (Jieganbalg and Plutschaw) ஆவார்கள். ஜீகன்பால்கும் அவரோ டொத்த லூதர்மிஷன்காரர்களும் மிக்க திறம் வாய்ந்தவர்கள். கிறிஸ் துவ வேதபுஸ்தக மொழிபெயர்ப்புகள் அல்லாமல் மதபிரசார நூல் வெளியீடுகளில் இன்றும் உயர்ந்த நிலையுடைய பிற நூல்களும் வெளி யிட்டார்கள். ஜீகன்பால்கு விவிலிய வேத நூலைத் தமிழில் மொழி பெயர்க்கத் தொடங்கினர். அவர் பின்னோராகிய ‘சூல்ட்ஸ்’ (Schultse) என்பார் அதனை 1725-ம் ஆண்டில் முடித்தார். இந்தியாவில் முதல் புரோடெஸ்டண்ட் வேத நூல் மொழி பெயர்ப்பு இதுவேயாம். ஜீகன்பால்டு 355 கிறிஸ்துவ சமயப் புதுச் சார்பினர்களை விட்டிட்டு 1719-ம் ஆண்டிலிறந்தார். “ என்று காணப் பட்டது. தரங்கம்பாடி டேனிஷ் கிறிஸ்துசமயப் பிரசாரகர்கள் வெளி யிட்ட நூல்கள் வேறு சிலவும் உள்ளன. அவை ஜீகன்பால்கு ஐயர் தமிழிலக்கணம்—1716· பெஸ்கி ஐயர் இலக்கணம்—1728, 1739 ஜீகன்பால்கு ஐயர் தொகுத்த அகராதி—1712 ஜீகன்பால்கு ஐயர் தமிழில் மொழி பெயர்த்த பைபில் புதிய ஏற்பாடு—1714 பைபில் முழுது மொழி பெயர்ப்பு—1723 தென்னிந்திய தேவதைகளைப் பற்றி ஜீகன்பால்கு எழுதிய நூலும் பதிப்பு ஆகிறது.

புறநாட்டார் எழுத்து தரங்கபாடியிற் கண்ட தன் காரணமாகத் தமிழ் நாட்டில் ஐரோப்பியருள் டேனிஷ்காரர் வந்தமை தெரிந்தோம்.

இனி கி. பி. 15ம் நூற்றூண்டின் இறுதியில் மூதற் கண் ஐரேப்பியருள் போர்த்துக் கேசியர் மேலைக் கடற்கரைப் பட்டின மாகிய கள்ளிக் கோட்டையிலும் பின்பு கோவாவிலும் தங்கிக் குடியேற்றம் பெற்று இரு நூறுண்டு தொடர்ந்திருந்த செய்தியும் வரலாற்றுன் நாம் அறிந்த தாம். பின்னர் ஒல்லாந்து (Holland) நாட்டினர் ஆகிய டச்சுக்காரரும் ஆங்கிலேயரும் இந்தியா வந்த வரலாறும் அவர்கள் பெற்ற ஆதிக்கமும் சரித்திரகாரர் கண்டனவேயாம். இவர்கட்குப் பின்பு பிரஞ்சுக்காரர் கள் வந்து புதுச்சேரி முதலிய சில ஊர்களைக் கொண்ட செய்தியும் அறிவாம். ஐரோப்பியருள் ஐந்து தேயத்தார்கள் ஆகிய போர்த்துக் கேசியர், ஒல்லாந்தாக்காரர், டேனிஷ்காரர்! ஆங்கிலேயர், பிரஞ்சுக் காரர் நம் தமிழ் நாட்டின் பல ஊர்களில் தங்கியிருந்தபோது அவர்கள் பொதுவாகப் பறங்கியர் என்றே தமிழ் நாட்டவரால் பெயரிட்டு வழங்கப் பெற்றனர். பின்பு அவ்வவர் தங்கிய இடங்களில் அவ்வவர் நாட்டுப் பெயராலும் வழங்கப்பட்டனர். ஆக அந்தப் பெயர்களுள் தமிழ் மொழியில் உலக வழக்கினும் நூல் வழக்கினும் பெரிதும் வழக்குப் பெற்ற திசைச் சொற்கள், பறங்கி, உலாந்தா என்பனவே பழமையானவை. ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் என்பவை பிற் காலத்தவையாம். இப் பெயர்கள்யாவும் இப்போது வெளிப்பட்டுள்ள சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் அகராதித் தொகுதிகளுள் இடம் பெற்றுள்ளன. யாழ்ப்பாணம், மதுரைத் தமிழ்ச்சங்கம் அகராதி களில் பறங்கி என்ற பெயர் காணப்படுகின்றது. இங்ஙனமே ஆங்கிலேயர் பதிப்புக்கள் ஆகிய ராட்லர் (Rev J. P. Rottler) அகராதி (1836) யிலும் கூவின்ஸ்லோ (Winslow) அகராதி (1862) யிலும் பறங்கி என்ற சொல் காணப்படுகின்றது. ஆனல் டேனிஷ்காரர் பெயரோ அவர் நாட்டின் பெயரோ அவர்மொழியின் பெயரோ இவ்வக ராதிகளுள் ஒன்றிலும் காணப்பெறவில்லை. இது மிக்கவியப்பாயுள்ளது. இவர்கள் பிற ஐரோப்பியர்களைப் போலத் தமிழ் நாட்டிலோ பிற பக்கத்து நாடுகளிலோ பெருக்கம் பெருமை காரணத்தால் இவர்கள் பெயர்கள் தமிழ் மொழியிடைக் கலப்புற்றுப் பரவை வழக்குப் பெற வில்லை என அறியக்கிடக்கின்றது.

டேனிஷ்காரர் பெயரும் அவர் மொழிப் பெயரும் தமிழ் நாட்டின் பிறபகுதிகளிற் பயிலாவிடினும் அவர்கள் வாழ்ந்த தரங்கம் பாடியில் வழக்குடைத்தாயிருக்குமன்றே? அதனை நாம் அறிந்து கொள்ளற்கு இடமாக இந்தக் கப்பல் சாஸ்திர ஏட்டுச்சுவடி கிடைத் துளது. இச் சுவடியின் தொடக்கத்து வாக்கியத்துள் "1620 ஹு தின

மாரக்காது பாசியான காலங்கிராயப் பிள்ளை வீட்டில்" என்று வந்துள்ள தொடர் இச் சரித்திரக் கூற்றினைப் புலப்படுத்துகின்றது. "தின மாரக்காது பாசியான" என்றதில் 'துபாசி' என்னும் சொல் "த்விபாஷி" என்ற வடமொழித் தொடரின் தமிழ் வடிவம் என அறியலாம். அதன் பொருள் இரண்டு மொழி பேசுவோன் என்பது. நம் தமிழ் நாட்டில் துபாஷ் பச்சையப்ப முதலியார், துபாஷ் ஆனந்த ரங்கபிள்ளை என்ற புகழ் பெற்ற பெரியார் பெயர்களைக் கேட்கின்றோமன்றே? அவர்கள் ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரர்க்கும் தமிழ் மக்களிடையே ஏற்பட்ட வணிகத் தொடர்பில் அவ்வவர்க்குச் சொல் மாற்றித் துணை புரிந்த படியால் துபாஷ் என அப்பெயர் வழக்கம் பெற்றார்கள். அவர்களைப் போன்று இத் தரங்கம்பாடியிலும் 'டென்மார்க்கு' தேசத்தவர்க்கும் தமிழ் மக்களுக்கும் இடையே சொன்மாற்றத் துணை புரிந்த ஒரு தமிழ்ச் செல்வருக்குத் "தினமாரக்காதுபாசி" எனப் பெயர் வந்ததென அறிக. ஆயின் 'துபாசி' என்ற சொல்லுக்கு முதலில் நிற்கும் "தினமாரக்கா" என்னும் திசைச்சொல் இங்கு "டென்மார்க்கு" தேசமொழியைக் குறிக்கின்றது எனக் கண்டு கொள்ளலாம். 'டென்மார்க்கு' என்ற பிற மொழிப் பெயர் பற்றித் திசைச் சொல்லாகச் சொல்லு முறையில் அக்காலத்துத் தமிழ் மக்கள் டகரம் மொழி முதல் ஆகாமையால் தகர எழுத்துத் தொடக்கம் கொண்டு ஒலிக்கு இயையத் 'தினமாரக்கா' எனச் சொல் ஆக்கிய திறம் காண்க. சொல்லாக்க அழகு பாராட்டத் தக்கது. இவற்றால் இவ்வேட்டுச் சுவடி 'தினமாரக்கா' என்றதிசைச் சொல் வடிவத்தை நமக்குத் தெரிவித்துச் சில நூற்றாண்டாக மறந்த செய்தியைப் புலப்படுத்துகின்றது காண்க. இச்சுவடியாலன்றி இப் பெயரினை நாம் அறிந்துகொள்ளுதற்குப் பிறிதொரு வழியில்லையாம்.

இனி இவ்வாக்கியத்துள் கண்ட ஆண்டு "1620" என்பது நம் தமிழ் நாட்டு வழங்கிய சாலிவாகன சகாத்த ஆண்டு கணக்கினை உட்கொண்டது என்றே கொள்ளவேண்டும். போர்த்துக்கேசியருக்குப் பின்னர் ஐரோப்பியர் பலரும் கி. பி. 1600-க்குப் பின்பே தத்தம் நாட்டில் கிழக்கு இந்தியக் கும்பினிகளை ஏற்படுத்திக் கொண்டு நம்மிந்திய நாட்டில் மேல் கீழ்க் கடற்கரைப் பட்டினங்களில் சில ஆண்டுகள் பிற்பட்ட நாளில் இடம் பெற்றுக் குடியேறினர்களாதலால் அவர்கள் நாட்டுக் காலக் கணக்கு ஆகிய கி. பி. 1620 என்பது இங்குப் பொருந்துமாறு இல்லை; அன்றியும் அவர்கள் குடியேற்றம் நிலைத்த பல ஆண்டுகட்குப் பின்பே தமிழருள் சிலர் அவர் மொழி

தேர்ந்து பேச்சு வழக்குத் தொடர்பு கொள்ள நேருமன்றிப் பிறவாற்ருல் ஆகாது என்று தேர்க. ஆதலால் சகாத்தக் குறிப்பு எனக் கொண்டால் இச்சுவடியில் குறித்த காலம் கி. பி. 1698 ஆகும். அஃது இந்தச் சுவடி தோன்றுதற்குரிய காலம் ஆதலில் தட்டில்லை.

இங்குத் ' துபாசி ' யாகக் குறிப்பித்த தமிழ்ச் செல்வர் பெயர் 'காங்கியராயப் பிள்ளை ' என்று ஏட்டில் உள்ளது. இஃது ஏடு எழுதியவரின் பிழையால் அமைந்த பெயர் என அறிக. தமிழ் நாட்டில் சோழ மன்னர் பன்னூற்றூண்டாக நிலைத்த ஆட்சி செலுத்திய காலத்தில் அம்மன்னர்க்கு மிக்க அணுக்கம் உடைய அமைச்சியற் செல்வர் ஆக அமர்ந்த பெரியார்கள் பலர் பெயர் காலிங்கர், காலிங்க ராயர் என்று பண்டைத் தமிழ் நூல்களுள் அறிகின்ரேம். விக்கிரமசோழனுலாவில் அச்சோழன்பால் அணுக்கம் பெற்ற செல்வர்களுள் ஒருவரை ஒட்டக் கூத்தர்

" அடியெடுத்து வெவ்வேறரசிரிய வீரக்கொடியெடுத்த காலிங்கர் கோனும் " என்று கூறியுள்ளமையாற் காண்க.

சிதம்பரம் கோயிலிலுள்ள கல்வெட்டுகளுள் ஒரு பாடல் ' காலிங்கர் ' என்பாரைப் புகழ்ந்துள்ளமையும் உடன் நோக்குக.

" தொல்லோர் வாழ்தில்லைச் சுடலையமர்ந்தான் கோயில்
கல்லா லெடுத்தமைத்தான் காசினியிற் ருெல்லை
மறை வளர்க்க வெங்கலியை மாற்றி வழுவாமல்
அறம் வளர்க்கக் காலிங்கனுய்ந்து "—

ஆகவே தமிழகத்துப் பெருஞ் செல்வர் கொண்ட திருப் பெயரையே ஈண்டுச் சுவடியிற் குறித்த தமிழ்ச் செல்வரும் கொண்டிருந்தனரென்று கொள்ளுக. அவர் தமிழருள் தலைமை பெற்ற வேளாளக் குடியாண்மை பூண்டோர் என்பது அவர்தம் ' பிள்ளை ' ச் சிறப்பும் பெயரால் அறியப்படும். இச்செல்வருடைய இல்லத்தில் இக்கப்பல் சாஸ்திரச் சுவடியிருந்தமையும் அது தெரிந்த எசமானர் ஒருவர் அதனைப் பெற்றுப் பெயர்த்து எழுதிக் கொள்ள விரும்பியமையும் அதற்கென அவர் ஏடுடைய பீடுடையார் வர்க்கத்தவரையடுத்து அவர்க்கு ஏடு உதவும் மனப்பான்மை உண்டாகுமாறு ஏற்பன சொல்லி உடன்படச் செய்து வேண்டிப் பெற்றமையும் ஈண்டுக் குறித்துள்ளது காணப், பண்டு நம் தமிழ் நாட்டவர் எவ்வாறு ஏடு போற்று தலை மேற் கொண்டிருந்தனர் என்பது நன்கு புலப்படும். ஐரோப்பியர் நம் நாட்டுக்கு வந்து குடியேறிய பின்பன்றே நம் நாட்டில் நூல்

அச்சிடுந் தொழில் அவர்களால் ஏற்படுவதாயிற்று. தரங்கம்பாடியில் தானும் கி. பி. 1720-ம் ஆண்டிற்குப் பின்புதான் அச்சுத் தொழில் ஏற்படுவதாயிற்று. ஆகவே அதற்கு முந்திய நாளில் இவ்வேட்டினைப் போற்றுதற்காக அதிலுள்ளவாறு பிறர் தம்முடைய ஏட்டில் எழுதிக் கொள்ளும் வழக்கிற்கு 'ஏடுதிருப்புதல்' என்ற பெயர் வழங்கியமையும் கண்டு கொள்ளுக. இத்துணையும் கப்பல் சாஸ்திரச் சுவடித் தொடக் கத்துள்ள வாக்கியம் காட்டிய செய்தி பற்றி நாம் ஆராய்ந்து கண்டவையாம்.

இனி அரிதிற் பெற்ற ஏட்டின் தன்மை பற்றிச் சிறிது கூறுதல் வேண்டும். ஏடுதிருப்பும் காலத்தில் ஏடு திருப்பும் எழுத்தாளர் பழைய ஏட்டினை உள்ளவாறே திருப்பி எழுதிக் கொண்டனராயின் பழைய ஏட்டின் நிலைமையே நாம் இப்போது காண்பது எனக் கொள்ளலாம். பழைய ஏடு செம்மையதாகவும் பிழை படத் திருப்புகிற எழுத்தாளர் தமக்குள்ள தமிழறிவு சாலாமைக் குறையால் ஏடு படிப்பதனில் சோர் வுற்றுப் பிழை பொதுள எழுதிக் கொள்ளுதலும் கூடும். இவ்வகைக் குறையால் இச்சுவடியில் காணும் பாடல்கள் யாவும் பாட்டின் அடி வரையறை இன்றியும் பொருள் பொருத்தம் இன்றியும் பலவாறு சிதைந்துள்ளன. பல சொற்கள் பிழை வடிவில் உள்ளன. கிடைத்த ஒரே ஏட்டின் குறையைப் பொருட்படுத்தாது அச்சிற் பதிப்பிக்க அரசாங்கத்தார் கருதிக் கட்டளையிட்டமையின் ஏட்டில் உள்ளவாறு பதிப்பிடலாயிற்று. எனினும் படிப்பார் பாட்டின் வடிவத்தை ஊகித் துணர்ந்து கொள்ளுமாறு ஒவ்வொரு பாட்டின் கீழும் திருத்தக் குறிப் புக்கள் கொடுத்துள்ளேன், இத்திருத்தக் குறிப்புக்களின் உதவி கொண்டு அறிஞர் பாட்டின் வடிவும் பொருளும் வாய்ப்ப அறிந்து கொள்ளுவார்களாக.

இக்கப்பல் கட்டும் கலைக்குத் தமிழில் ஒரு நூல் எழுந்தமையும், அது தானும் தமிழ் நாட்டறிஞர் வழிமுறை வழக்கிற் பாடலானமைந் தமையும், அப்பாடல் நூல் வழக்குடன் உரையெழுந்தமையும் நோக்க இந்நூல் எத்துணைப் பழமையானது என அறுதியிட இயலவில்லை.

இச்சுவடியின் பாடல்கள் விருத்தயாப்பில் உள்ளன. சில சந் தப் பாடலாக உள்ளன. நான்காம் பாடலின் இறுதியடி இச்சுவ டிக்கு 'நீகாமசிகாமணி' என்று பெயர் கூறுகின்றது. இஃது அழகிய வடமொழிப் பெயர். எட்டாவது பாட்டின் இறுதித் தொடர் 'சலைகதி ரங்கன் சொற்படியிதனைத் தமிழ் செய்திட்டான்' என்றிருத்தலால் இந் நூல் வடமொழியில் அமைந்த ஒரு கப்பல் கலையின் மொழி பெயர்ப்பு என்று கொள்ள வேண்டியிருக்கிறது. வடமொழியில் 'நௌகா சாஸ் திரம்' என்ற ஒன்று உளதெனத் தெரிகின்றது. மொழிபெயர்ப்புச்

செய்யுமாறு சொல்லிட்டார் பெயரை இத்தொடரினின்று நன்குணரு மாறில்லை. சில பாடல்களில் அழகிய மகுடூஉ முன்னிலைத் தொடர்கள் அமைந்துள்ளன. 11, 12—ம் பாடல்களைக் காண்க. இவற்றின் ஓசையும் சொற்செறிவும் பொருட் பொருத்தமும் மிக நயமாகவுள்ளன. என் செய்வது! நல்ல நடையுள்ள ஒரு பழைய நூல் செவ்வி குலைய இலக்கணப் பிழைகள் எண்ணில எதிர ஏடு திருப்பிய எழுத்தாளார் எல்லாம் பெயர்த்துள்ளனர். படிப்போர் பொறுமையுடன் நோக்கி உண்மை காணுமாறு வேண்டுகின்றேன்.

இச்சுவடியின் 20 - ம் பாட்டில்

“ தாவு பரிகுடை சிவிகை தன்று? தாளம்
தடமுக தெடவுடைப் தாதி வெள்ளம்?
பாவலர் தண்டமிழ்க் குதவும் பரசை வேந்தன்
பண்ணுமிவை நன்மையெனப் பகர்ந்திடாயே.”

என்று தமிழ்ப் பாவாணர்க்குப் பெருஞ் சிறப்புச் செய்யும் வள்ளன்மை வாய்ந்த ஒரு தமிழ் மன்னன் பாராட்டப்படுவது காணலாம். இந்நூற் பாடல்கள் பெருங்குறை பாடுடையனவாக இருத்தலால் இப் பெரு வள்ளலைப் பற்றிய பிற செய்திகள் நாம் நன்கு அறிந்துகொளு தற்கு இடனில்லை. இந்நூலின்கண் “ நீகாம சிகாமணி” என்ற வட மொழிப் பெயர் அமைப்பும், ‘சலை கதிரங்கன் சொற்படி தமிழ் செய் திட்டான்’ என்ற குறிப்பும், ‘பரசை வேந்தன்’ பாராட்டும் சிறப்பாகக் காணப்படுகின்றமையுடன் பண்டைப் பான்மையாகப் பாட்டும் உரையும் பயின்றுள்ளமையும் கூர்ந்து நோக்கின் இது சிறந்த தமிழ் நூலாக முன்பு நிலவியிருந்து காலப் போக்கில் சுவடி பெயர்த்துப் போற்றாக் குறையால் இக்காலத்து மிகச் சிதைந்த நிலைமையிற் காணப்படுகின்றது என்று கொள்ளுக. போற்றற்றுக் கெட்டுப் பொலிவற்ற இச்சுவடியின் நிலைமை கண்டு தமிழன்பர்கள் உள்ளம் காற்றத்திடைப்பட்ட கலவர் மனம் போல ஆற்றத் துளங்கியலைவெய்தும் என்று நான் இரங்கிக் கூற நேர்கின்றது.

வடமொழியிற் சிற்ப நூல்கள் பெரும்பாலும் வாஸ்து இலக்கணம் பற்றிய சோதிடக் கூறுபாடுகள், அளவைகள் இவற்றை விரித்துரைத்துச் செல்லும் இயல்புக்கு ஒப்ப இத்தமிழ்க் கப்பல் சாஸ்திரமும் பெரிதும் வாஸ்து இலக்கணம் பற்றிய சோதிடக் கூறுகளையும் அளவைகளையும் விரித்துரைக்கின்றது. இச்சோதிடச் செய்திகள் யாவும் உரை நடையாக மட்டும் அமைந்தும் உள்ளன. அன்றியும் இச்சுவடியினிறுதியில் மனைகோலும் முறைமைகளைத் தெளிவுறுத்தும் சிற்ப நூற்செய்திகளைக் கொண்ட சில பழம் பாடல்களும் காணப்படுகின்றன. அவைகளும் சோதிட நூற்செய்திகளையுடையனவே. இச்

சுவடியில் இவ்வாறு சோதிடச் செய்திகள் பெரிதும் அமைந்துள்ளமை கண்ட ஏட்டெழுத்தாளர் தாமும் தமிழ்ச் சோதிட நூல்களுள் கண்ட பல சோதிடச் செய்திகளை இடையே கோத்துத் தொகுத்துள்ளனர் என்று தெரிகின்றது. இவை எல்லாம் குறைபாடுகளாம்.

பெருங் குறைபாடுகளும் பிழைகளும் உள்ள இச்சுவடியைச் செப்பம் செய்து பதிப்பித்தற்கு வேறு ஏட்டுச் சுவடிகளின் உதவி யிருந்தாலன்றி உண்மைப் பாடமும் பொருளும் அறிந்து கொள்ள இயலாது. இவ்வகைப் பிரதிகளின் உதவி இப்போது இல்லாமையால் ஏறத்தாழ மூந்நூற்றாண்டுகட்கு முற்பட்ட இப்பழமையான ஏட்டுச் சுவடியையும் இறந்தொழிய விடுதல் கூடாது என எண்ணிக் கிடைத்த அளவில் அதன் உண்மையிருப்பினைத் தமிழ் மக்கள் கண்டு கொள்ளு மாறு இங்குப் பதிப்பிக்கப் பெறுகின்றது. இச்சுவடியின் பாடல் உரைகட்குக் கீழாக அடிக்குறிப்பில் இந்நூற் பாடல்கள் உரைப் பகுதி களின் திருத்தங்களை இன்னவாறு காணலாம் எனச் சில குறிப்புகள் கூறப்பட்டுள்ளன.

தமிழறிவு சாலாச் சிறியேன் இத்தமிழ்ப் பணியிற் செய்த பிழைகளை நல்லறிஞர் காணின் பொருத்தருளித் திருத்தம் கண்டு கொள்ளுவதன்றித் தமிழுலகிற்கு உதவுமாறு வேண்டுகின்றேன்.

**தி. வா. பழனியப்ப பிள்ளை.**

---

# கப்பல் தொழில்

ஆதிகாலத்து மக்கள் தாம்தாம் வாழ்ந்த இடங்களில் குளம், குட்டை, ஏரி முதலிய நீர்நிலைகளிலும், வாய்க்கால், ஆறு முதலிய நீரோட்டங்களிலும் இலைகள், பூக்கள், மரக்கட்டைகள் முதலியவை மிதந்து நிற்றலையும் மிதந்து செல்லுதலையும் கண்ணுற்று நீருக்கு இயல்பாய் அமைந்துள்ள மிதப்புத் தன்மையை உணர்ந்திருந்தனர். அன்றியும் அம் மிதப்புப் பொருள்களின் மீது வண்டு, தவளை, நீர்வாழ் பறவைகள் ஆகிய பிராணிகள் தங்குதலும் ஊர்தலும் கண்டு நிலத்தில் தாம் வண்டி, வையம் இவற்றில் ஊர்ந்து செல்லுதல்போல நீரினும் மிதவை மீது ஊர்ந்து செல்ல முயன்றனர். அம் முயற்சியால் அவர்கள் முதல்முதலாக மிதவை, தெப்பம் இவற்றை அமைத்துக்கொண்டனர். கடலால் பெரிதும் சூழ்ந்துள்ள நம் தமிழ்நாட்டில் கீழ்க்கடற்பாக்கங் களில் கட்டுமரங்களில் பரவர் ஊர்ந்து கடலுள் பகலெல்லாம் மீன் பிடித்தல் ஆகிய தம் தொழிலில் முயலுதலை நாம் இன்றும் காண்கின் றோம். இஃது அப் பழைய வழக்கத்தைக் காட்டுதல் அறிக. கிளிஞ்சல்,

சங்கு முதலிய உட்குழிவுள்ள பொருள்கள் நீரின் மிதந்து நிற்றலையும், உட்குடைவுள்ள மரங்கள் நீரோட்டத்தில் மிதந்து வருதலையும், அவற்றில் பறவை முதலியவை தங்கிச் செல்லுதலையும் கண்ணுற்றுக் கட்டு மரங்கள் அன்றி மரங்களை உட்குடைந்து ஓடங்களைச் செய்து நீரில் ஊர்ந்தனர் ஆவார். இவ்வகையான இயற்கைக்காட்சி யறிவே முற்கால மக்களுக்கு நீரிற் செல்லும் தெப்பம், மிதவை, ஓடம் முதலிய வற்றைச் செய்துகொண்ட செயற்கைத் தொழில் அறிவுக்குக் காரணம் என்று வரலாற்று அறிஞர் கருதுகின்றார்கள். ஐரோப்பிய மொழிகளில் (Ship) ஷிப், ஸ்கிப் முதலியவாக வழங்கும் சொற்கள் மரம் உட்குடையப்பட்ட தன்மையைப் புலப்படுத்துகின்றன என்பர். தமிழில் மிகப் பழைய வழக்கச் சொல்லாக உள்ள ‘தோணி’ என்பதும் இவ்வாற்றாற் பொருள் கொள்ளத் தக்கதாகத் தோன்றுகிறது. சிலர் இச்சொல் வடமொழியில் ‘த்ரோணி’ என வழங்குகின்ற மொழியின் திரிபு எனக் கூறுவதும் உண்டு.

தமிழ்மொழியில் மிகப் பழைய இலக்கணநூல் ஆகிய தொல்காப்பியம் தமிழ்மக்கள் பொருள் ஈட்டும் முயற்சியில் தாம் தமது இல்லம் நீங்கிப் புறநாடுகட்குச் செல்லுங்கால் காலினும் கலத்தினும் சென்றுவந்த பழமையான வழக்கத்தைப் புலப்படுத்தி அப்பொருள் முயற்சிப் பிரிவு இன்ன காலத்து நிகழும் எனக் குறிப்பிடுதற்கண்,

“ இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும்
உரிய தாகுமென் மனார் புலவர் ”

என்று தெரிவிக்கின்றது. இதனுள் காலிற் பிரிவு, கலத்திற் பிரிவுகள் குறிக்கப்பட்டன என்பது உரைகளால் அறியலாம். கால்-என்பது வட்டை: வண்டியாகும். கலம் என்பது மரக்கலம் ஆகும். இது தமிழகத்து மாந்தரின் பழைய நடப்பினைக் காட்டுகின்றது காண்க. அன்றியும் ‘முந்நீர் வழக்கம் மகடூஉ வொடில்லை’ என்ற பிறிதொரு சூத்திரத்தினும் இப் பழமையான வழக்கத்தினைக் குறிப்பிட்டுள்ளது காண்க.

இவ்வாறு மிகப் பழமையான தமிழர் வழக்கம் தொன்னூலிற் குறிப்பிட்டதற் கேற்பத் தமிழ்மொழியில் பல சொற்கள், கடலிற் செல்லும் மரக்கலத்திற்கு உரியனவாக வழக்கம் பெற்றுள்ளன. சேந்தன் திவாகரம் என்ற பழைய தமிழ் நிகண்டு மரக்கலத்தின் பெயர்களை எடுத்தோதுவதனைக் கருதின் இப்பழமை தெளியப்படும்.

“ வங்கம் பாதை தோணி யானம்
தங்கு மதலை திமில்பாறு அம்பி
பஃறி சதாவே பாரதி நவ்வே
போதந் தொள்ளை நாவா யென்றிவை
மேதகு நீர்மேல் ஓடும் மரக்கலம் ”

என மரக்கலத்தின் பல பெயர்களைக் கூறிப் பின்னர் தோணியின் பெயர்களை வேறாகத் தொகுத்துரைக்கின்றது.

" பகடு பஃறி யம்பி யோடம்
திமிலை தோணி யெனச் செப்பினரே "

இனி இவற்றின் வேறாகிய தெப்பத்தின் பெயராக,

" பகடு பட்டிகை யானம் அம்பி
படுவை தொள்ளை புணைமிதவை தெப்பம் "

என்பவற்றைக் காட்டுகின்றது.

இவற்றுள் யானம், பாரதி, நவ், போதம், நாவாய் என்ற வட சொற்கள் ஒழிந்த பிற சொற்கள் எல்லாம் தமிழ்ப் பழஞ் சொற்களே. இன்றும் மலையாள நாட்டில் வழங்கும் வள்ளம், வத்தல், வஞ்சி முதலிய சொற்களும் தமிழ்ப் பழஞ் சொற்களேயாம். இவை நிகண்டில் எடுத்து ஓதப்பெறாவிடினும் தமிழ் நூல்களில் பெருவரவின என அறியலாம்.

'வள்ளப் பட்டன மகரக் கடலென' எனக் கம்பநாடர் கூறுவது காண்க. (யுத். அட்ச. 28)

தமிழ் மொழியில் மிகப் பழைய நூல்கள் ஆகிய சங்ககாலத்து எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலியவற்றுள் எல்லாம் தமிழர் கடல் வழிக் கப்பல் செலுத்திய செய்திகள் பலவாறு எடுத்துக் கூறப் பட்டுள்ளன. அவற்றுள் ஒருசிலவற்றை இங்குக் காணலாம்.

அகநானூற்றுள் ஒரு பாடல் தமிழர் கலஞ் செலுத்திக் கடல் கடந்து புறநாட்டுப் பொருள் ஈட்டும் முயற்சியினை கூறுமுகத்தால் கீழ்க்கண்டவாறு கப்பல் சென்ற இயல்பினைத் தெரிவிக்கின்றது.

" உலகு கிளர்ந்தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடைப் போழ
விரவு மெல்லையு மசைவின் றாகி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
வாள்வினைப் பிரிந்த காதலர் ................." (255)

இதன் முதலடி அக்காலத்துத் தமிழ்நாட்டு மரக்கலம் உருவத்தால் மிகப் பெரிதாகவும் பெருந் திரளான மக்களையும் பொருட்களையும் தாங்கிச் செல்லும் பரப்பினதாகவும் இருந்ததெனக் குறிப்பிடுதல் காண்க. அது கடல் நீரினைப் பிளந்து விரைந்து செல்லுந் தன்மையும், கடற்பரப்பில் இடையறவின்றி வீசும் காற்று ஓட்ட ஓடும் தன்மையும், அதனைச் செலுத்தும் 'நீகான்' என்ற கப்பலோட்டி கடற்கரையின் உயர்ந்து தோன்றும் மணல்மேடுகளின் நோக்குடையதனல் தன்மையும், இரவின்கண் கரையிடத்துள்ள பெருவீடுகளின் மேலையிலுள்ள

விளக்கொளியின் துணை கொண்டு கரைமருங்குசார்ந்த தன்மையும் கூறியிருக்கும் இயல்பும் நோக்குக.

புறநானூற்றுள் ஒரு பாடலினடிகள் கப்பல் வணிகத்தின் இயல்பினைக் கூறுவது காண்க.

"...................................கூம்போடு
மீப்பாய் களையாது மிசைப்பரந்தோண்டாது
புகார்ப் புகுந்த பெருங்கலந்தகாஅ
ரிடைப்புலப் பெருவழிச் சொரியுங்
கடற்பஃறாரத்த நாடுகிழவோயே"

இதனுள் மரக்கலம், கூம்பு, மீப்பாய் முதலிய உருப்புகள் உடைமையும், நன்னாட்டுப் பல்பண்டப் பெரும்பாரம் கொண்டு செல்லும் இயல்பும், அவற்றை இறக்குவதற்குப் புகார் முகத்தே அடையும் தன்மையும், அக்காலையில் பரவர், அளவர் முதலிய தொழிலாளர் இறக்குமதித் தொழில் முயற்சியுடையராதலும் கூறியிருத்தல் காண்க.

இனி, தமிழ்நாட்டரசர் அப் பழங்காலத்தே கப்பல் உடையராயிருந்தமையும் பிறரோடு கப்பற்போர் பொருதமையும் புறநானூற்றுப் பாடல் ஒன்றிற் காட்டப்பெற்றுள்ளதும் இங்கு காண்க.

"சினமிகுதானை வானவன் குடகடற்
பொலந்தருநாவா யோட்டிய வவ்வழிப்
பிறகலஞ்செல்லாது"

இதனால் தமிழ்நாட்டின் மேற்குக் கடல் புகுந்துப் பிறர் மரக்கலங்களின் வரவும் அவ்வரவால் சேர மன்னர் நிலத்து முரண்பாடும் அதன் பொருட்டுச் சேர மன்னர் தம் கடல்வழி மரக்கலப் படைவலியாற் பிறர் மரக்கல வரவினைத் தடைபடுத்திய செய்தியும் அறிந்து கொள்க.

இவ்வாறே அக்காலத்துக் கீழைக் கடற்புறத்துச் சோழ மன்னர் வருங் கப்பற்படை யுடையராயிருந்தமை பிறிதொரு புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. சோழன் கரிகாற் பெருவளத்தனை வெண்ணிக் குயத்தியார் என்ற தமிழ்ப் பெருமாட்டி அன்னான் கடற்படைவலி போற்றி விளிப்பாராய்.

"நளியிரு முந்நீர் நாவாயோட்டி
வளிதொழி லாண்டவுரவோன்மருக"

என்று பாடினர். பிற் காலத்து சோழ மன்னர் கடற்படை வலியால் புற நாடுகள் ஆகிய கடாரம், ஈழம் மாநக்கவாரம் இவற்றைத்

தம் கைப்படுத்து ஆண்டதிறன் " அலைகடல் நடுவில் பல கலஞ்செலுத்திய ஆண்மையால் " எய்தியதென உணர்ந்து கொள்ளுக.

கப்பல்கட்டும் தொழில் பற்றிய குறிப்பு ஒன்றும் பழந்தமிழ் நூல் வாயிலாக அறிந்து கொள்ளலாம். பரிபாடல் செய்யுள் 10-வது 53-55-அடிகளில்

இதையுங் கயிறும் பிணையு மிரியச்
சிதையுங் கலத்தைப் பயினாற் றிருத்துந்
திசையறி நீகானும் போன்ம்"

மரக்கலம் தன் பாயும், கயிறும், மரப்பிணைப்பும் அற்றுத் தொலைவுறும் வழி அம்மரக்கலஞ் செலுத்துவோன் அதனைத் திருத்தியமைக்கும் முறையில் மரப்பிசினால் இயைபு கொளுத்தல் கூறியிருத்தல் காண்க. இவ்வாற்றால் தமிழ்ப்பழய நூல்களுள் பல கப்பற் செய்திகள் காணக்கூடும்.

இனி நமது பாரதநாட்டின் பண்டைப் பெருமைகளுள் ஒன்றாகிய கப்பல் தொழிலும், வாணிகமும் வடமொழி நூல்களுள்ளும் பல படி காணப்படுகின்றன என்பர் அந்நூல் வல்லார். தாரா நகரத்து அரசன் ஆகிய போசன் என்பான் இயற்றிய 'யுக்தி கல்ப தரு' என்ற பெருநூல் அணிகலன், படைக்கலன், குதிரை, யானை, கொடி, குடை, இருக்கை, அமைச்சு, கப்பல் முதலியவைபற்றி விரிவாகப் பல செய்திகளைக் கூறுகின்றமை வடநூல் வல்லார் அறிவர். அஃது இன்னும் ஏட்டுச்சுவடி அளவிலே யிருந்துவருவதாயினும் அறிஞர் சிலர் முயற்சியினாற் பல செய்திகள் அறியக் கிடக்கின்றது. கப்பல் கட்டும் தொழில் பற்றி அச்சுவடி யுரைக்கும் செய்திகளைக் குறித்துக் காணலாம்.

கப்பல்கள் தம் உருவால் பொது (சாமானியம்), சிறப்பு (விசேஷம்) என இரு வகைப்படும். ஆறு, வாய்க்கால் வழிச்செலவுடைய மரக்கலங்கள் பொதுவகையைச் சார்ந்தன. கடல்வழிச் செலவுடையவை சிறப்பு வகையைச் சார்ந்தன ஆகும். பொதுவகையைச் சார்ந்தவைகள் மேலும் பத்து வேறுவகைகளாகக் கூறப்படுகின்றன. இவ்வேற்றுமை, நீளம், அகலம், உயரம் என்ற அளவுபற்றி அமைந்ததாகும். கீழே இவ்வகை விவரம் காண்க.

**பொது வகை**

| | பெயர் | நீளம் (முழம்) | அகலம் (முழம்) | உயரம் (முழம்) |
|---|---|---|---|---|
| 1. | க்ஷுத்ரா | 16 | 4 | 4 |
| 2. | மத்யமா | 24 | 12 | 8 |
| 3. | பீமா | 40 | 20 | 20 |
| 4. | சபலா | 48 | 24 | 24 |

| பெயர் | நீளம் (முழம்) | அகலம் (முழம்) | உயரம் (முழம்) |
|---|---|---|---|
| 5. பதலா | 64 | 32 | 32 |
| 6. பயா | 72 | 36 | 36 |
| 7. தீர்கா | 88 | 44 | 44 |
| 8. பத்ரபுதா | 96 | 48 | 48 |
| 9. கர்பரா | 112 | 56 | 56 |
| 10. மந்தரா | 120 | 60 | 60 |

இவற்றுள் பீமா, பயா, கர்பரா என்பவை தீப்பயன் விளைப்பன வாம். இவற்றின் அளவுகள் நீரின் நிலைத்தற்குரிய இயல்புடையன அண்மையின் ஒவ்வாதன எனக் காட்டியுள்ளது.

கடல்வழிச் செலவுடைய மரக்கலங்கள் சிறப்புவகையன ஆகி முதன்மையாக இருதிறன் ஆகக் கொள்ளப்படுகின்றன. நீளத்தால் சிறந்த மரக்கலங்கள் யாவும் **தீர்கா** எனப்படும். அகல நீளங்களாக அன்றி உயரத்தால் சிறந்த மரக்கலங்கள் **உன்னதா** எனப்படும். மேலும் 'தீர்கா' வகையைச் சேர்ந்தவை பத்து வகையன ஆகவும் கொள்ளப் படுகின்றன. அவற்றின் பெயர்களும், அகலம், நீளம், உயரங்களும் கீழே குறிக்கப்படுகின்றன, காண்க :

## சிறப்பு வகை

| தீர்கா | நீளம் 42, | அகலம் 5 1/4, | உயரம் 4 1/5 |
|---|---|---|---|
| பெயர் | நீளம் | அகலம் | உயரம் |
| 1. தீர்கிகா | 32 | 4 | 3 1/5 |
| 2. தரணி | 48 | 6 | 4 4/5 |
| 3. லோலா | 64 | 8 | 6 2/5 |
| 4. கத்வரா | 80 | 10 | 8 |
| 5. காமினீ | 96 | 12 | 9 2/5 |
| 6. தரீ | 112 | 14 | 11 1/5 |
| 7. ஜங்காலா | 128 | 16 | 12 4/5 |
| 8. ப்லாபினீ | 144 | 18 | 14 2/5 |
| 9. தாரிணீ | 160 | 20 | 16 |
| 10. பெகினீ | 179 | 22 | 17 3/5 |

இந்தப் பத்து வகையான 'தீர்கா' மரக்கலங்களுள் தீப்பயன் சேர்ப்பன லோலா, காமினீ, ப்லாபினீ என்ற மூன்றும் இவற்றிடைப் பட்டவையுமாம்.

**உன்னதா**

| | பெயர் | நீளம் | அகலம் | உயரம் |
|---|---|---|---|---|
| 1. | ஊர்த்வா | 32 | 16 | 16 |
| 2. | அநூர்த்வா | 48 | 24 | 24 |
| 3. | சுவர்ணமுகி | 64 | 32 | 32 |
| 4. | கர்ப்பிணீ | 80 | 40 | 40 |
| 5. | மந்தரா | 96 | 48 | 48 |

இந்த ஐந்து வகை மரக்கரங்களுள் அநூர்த்வா கர்ப்பிணீ இவை தீமை தருவனவாகும். ஊர்த்வா என்பது மன்னர்க்குப் பேரூதியம் வருவிப்பன ஆகும்.

'யுக்திகல்பதரு' என்ற வடநூல் கப்பல் பயணம் கொள்வோர்க்கு உரிய நலன்கள் அமையுமாறு அவற்றை அணியும் முறைமைகளையும் வாய்ப்பக் கூறுகின்றது. அழகுறுத்தற்குரிய உலோகங்கள் பொன்னும், வெள்ளியும், செம்பும் ஆகிய இம்மூன்றும் அன்றி இவற்றின் கலப்பு உலோகமும் ஆகும் என்கின்றது. நான்கு வகை மரக்கலங்களுக்கு நால்வேறு வண்ணங்கள் தீட்டுமுறைமையுங் கூறுகின்றது. நான்கு கூம்புகள் உள்ள மரக்கலத்துக்கு வெள்ளை வண்ணம் வேண்டும். மூன்று கூம்புகள் உள்ள மரக்கலம் செவ்வண்ணம் தீட்டப்பெறும். இரண்டு கூம்புகள் உள்ள கப்பலுக்கு மஞ்சள் நிறம் உரியது. ஒரு கூம்பு உள்ள கப்பல் நீலவண்ணத்தால் நிலை பெறற்குரியது. மரக்கலங்களின் முகப்புப் பாகத்தில் பல வடிவங்கள் அமைத்தல் பொருந்தும். அவ்வடிவங்கள் ஆவன அரியேறு, எருமை, பாம்பு யானை, புலி, அன்னம், மயில், கிளி, தவளை ஆண் மகன் இவற்றின் தலை வடிவங்கள் ஆகும். இவை மரக்கலத் தச்சு வினைஞன் கைத்திறனைக் காட்டுவன ஆகும். பிற அணிவகை முத்துமாலை பொன்னரி மாலை முதலிய அணிதலாகும். இவை போன்ற பல செய்தி வடமொழி நூல்கள் பலவற்றுள் பெரிதும் காணலாகும்.

நம் தமிழ் நாட்டின் கீழைக் கடற்கரையூர்கள் சிலவற்றிலும் மேலைக் கடற்கரையூர்கள் சிலவற்றிலும் இந்நாளிலும் பண்டை மரபின்படி மரக்கலவகைகளிற் சில கட்டப்படுகின்றன. அவ்வூர்களில் அம்மரக்கலக்கட்டு வினையாளர்களை உசாவியறிந்த செய்திகள் சிலவும் இங்கு அறிந்து கொள்ளுதலால் சிறிது விளக்கம் கூடும். பரங்கிப் பேட்டை என்ற கடற்கரை பட்டினத்தில் வடவெள்ளாறு கடலோடு கலக்கும் புகார்த் துறையில் இன்றைக்கும் மரக்கலம் கட்டும் தொழில் நடைபெறுகின்றது அறிந்து அங்குள்ள முதுவர் ஒருவரை நெருங்கி வினவியதில் இந்நூலிற் காணாத சில பெயர்கள் தெரிய வந்தது அவை

யாவன :— **பாய்மர வகையில்**, பெரிய பாய்மரம் திருக்கைத்தி மரம், காண பொய்மரம், கோசு பாய்மரம். **கயிறு வகையில்**—ஆஞ்சான் கயிறு, தாம்பாங் கயிறு, வேடாங் கயிறு, பளிங்கைக் கயிறு, மூட்டங் கயிறு, இளங் கயிறு என்பன.

**கப்பல் கட்டுதற்குரிய மரங்கள் :**— வேம்பு, இருப்பை, புன்னை, நாவல். இவை நீர்மட்ட வைப்புக்கு உரியன.

பக்கவங்குக் கால்களுக்கு—வெண்தேக்கு, தேக்கு, இவை உரியன.

முழக்கோல் என்பது தச்சு முழம் 20 அங்குலமாம். எனினும் $19\frac{3}{4}$ அங்குலமாகக் குறைத்தே வைப்பது வழக்கம் ஆகும். வங்கு வரிகள் (Side planks) என்பன $2\frac{1}{4}$, $3\frac{1}{4}$, $4\frac{1}{4}$, $5\frac{1}{4}$ ஆக இவ்வாறு உயர்ந்து ஏறுதல் வழக்கு என்றும் தெரிய வந்தது. சுக்கானைப் பற்றிய செய்தியும் நங்குரம் பற்றிய செய்தியும் பலவாறுள்ளன. இவை போன்றன இப்போது கிட்டிய கப்பல் சாஸ்திரத்திற் காணவில்லை என அறிக.

மேனாட்டிலும் பதினெட்டாம் நூற்றாண்டு வரை நம் நாட்டுக் கப்பல்கள் போன்று பழமையான காற்றோட்டத்தாற் செல்லுங் கப்பல்களே இருந்தன. அந்நூற்றாண்டில் பல ஆராய்ச்சிகளால் நீராவிவன்மையும் இயந்திரத் திறனும் அந்நாட்டவர்கள் கண்டு மாந்தர் நல்வாழ்வுச் சாதனமாக அவற்றைக் கொண்டு கையாளத் தொடங்கியமையால் நீராவிக் கப்பல்களும், போர்க் கப்பல்களும், நீர்மூழ்கிக் கப்பல்களும் என்ற சிறப்பு வகையன ஏற்பட்டனவாகும். இவற்றின் திறம் எல்லாம் இக்காலத்து எழுந்த ஆங்கில நூல்களானும் பிறவாற்றானும் அறியக் கூடும்.

**தி. பொ. பழனியப்ப பிள்ளை.**

---

ஸ்ரீ

# கப்பல் சாஸ்திரம்

கப்பல் சாஸ்திரத்தைப் பத்தி யெசமான கனுத்தாரப்படிக்கி தயங்கம் பாடியில் முதன்மையாக 1620ஆ தினமாரக்கா துபாசியான காலங்கியராயப் பிள்ளை வீட்டில் அவாள் வர்கத்தார் கையிலிருந்து மனருசி பண்ணி வெளிப்படுத்தி வாங்கின கப்பலுகள வைப்பிக்கிற சாஸ்திரத்தை பார்த்து சரியாக திருப்புகிற புஸ்தகம்.

## ஸ்தோத்திரம்

1. ஆயகலைக ளறுபத்து ஞங்கினையும்
வேய அறிவித்த யென்னம்மை
தூய உருப்பளிங்கு வாராமல் உள்ளத்தினுள்ளே
யிருப்பளிங்குவாரா திடர்.

2. வெள்ளைக் கலையுத்தி வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீத்திருப்பாள்
வெள்ளை யரியாசனத்தில் அரசரோ டெம்மைச்
சரியாசன த்தில் வைத்த தாய்.

---

கப்பல் சாஸ்திரத்தைப் பற்றி எசமானர்கள் உத்தரவுப் படிக்குத் தரங்கம் பாடியில் முதன்மையாக 1620 ஆ தினமாரக்கா துபாசியான காலிங்கராயப் பிள்ளை வீட்டில் அவர்கள் வர்க்கத்தார் கையிலிருந்து மனராசி பண்ணி வெளிப்படுத்தி வாங்கின கப்பல்கள் வைப்பிக்கிற சாஸ்திரத்தைப் பார்த்துச் சரியாகத் திருப்புகிற புஸ்தகம்.

தினமாரக்கா:— ஐரோப்பாக் கண்டத்துள்ள டென்மார்க் (Denmark) தேசத்துப் பாஷை.

துபாசி-த்விபாஷி, என்ற சம்ஸ்கிருதத் தொடர்மொழியின் திரிபு: இரண்டு பாஷைகள் பேசுவோன் என்பது பொருள். பரதேச பாஷையைச் சுவதேச பாஷையில் பெயர்த்துக் கூறுபவன் ஆகும்.

திருப்புகிற புஸ்தகம்:— ஓர் ஏட்டில் எழுதியுள்ளதனைப் பிறிது ஓர் ஏட்டில் எழுதிப் போற்றுகின்ற சுவடி.

1. இச்செய்யுள் பிழைபட எழுதியுள்ளது. இது 'சரசுவதி யந்தாதி' என்ற தமிழ்ச் செய்யுள் நூலில் உள்ள வெண்பா.

"ஆய கலைக ளறுபத்து நான்கினையு
மேய வறிவிக்கு மென்னம்மை—தூய
வுருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
யிருப்பளிங்கு வாரா திடர்"—என்பது இதன் வடிவம்.

2. இது காளமேகப் புலவர் பாடிய வெண்பா. இதன் வடிவம்:—

வெள்ளைக் கலையுடுத்தி வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்—வெள்ளை
யரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய்

துவக்கத்தில் தேங்காயுடைத்து பூசை பண்ணி தேங்காயுடைக்கை யில் அது உடைஞ்ச குறிப்பறிந்து பின்வருகிற நலயிப்பம் அறியச் சொல்லுகிற சாஸ்திரமதாவன—

1. முடிபெருத்து வட்டமிடில்த் திருவே சேரும்
மூன்றுபங்கி லொன்றுடைந்தால் சேஷம் தோஷம்
நெடியபங்கில் அஞ்சிலொன்று துலையாச் செல்வம்
நீங்கி பைடிபிநிதான வாய்ப் பாய்
கடிந்து கனிலுள்ளானல் ரெத்தினம் சேரும்
கரத்தினல் ரெனடறிந்த கனத்த பூசை
அடியவர்க்கு முன்னிலங்கும் கம....மேனடே
அருந்திய காயின் சயனுமறிந்து கொள்ளே.

2. தினமை அணிமணி ஒன்றுரென்று தனகன்னுலானி
வருமனு லாகி லடையுந் துன்பம்
மேனிதனில்க் கண்தெரித்தால் மானமல்லால் விளங்குனரம்
ஓடுவிட்டால் விரும்புஞ் சன்னி
நீளிதனில் விளையமிட்டால் நிதிபோம்ஓடு நெரிந்திடிலே
ரேகைபினி யாம்நிலத்தில் வீழ்ந்தால்
தானும்விலை பாப்பார்கே வுளமயீசன் மைந்தன்
தந்திமுகன் குருனுநதியாக யிசையனந்தானே.

---

(Preface correct form) துவக்கத்தில் தேங்காயுடைத்துப் பூசை பண்ணித் தேங்கா யுடைக்கையில் அது உடைந்த குறிப்பறிந்து பின்வருகிற நல மிழப்பம் அறியச் சொல்லுகிற சாஸ்திரமதாவது:—

மேற்கண்ட இரண்டு பாடல்களும் பல பிழைகள் குறைகளுடன் உள்ளன. இவை இரண்டும் சோதிட கிரக சிந்தாமணி என்னும் பெரிய வருஷாதி நூலில் உள்ளவையாகும். அதிலுள்ளபடி கண்டு வேறுபாடு நோக்கிக் கொள்ளுக.

முடிசிறுத்து வட்டமிடிற் றிருவந் தெய்தும்
மூன்றிலொரு பங்குடைந்தா லினச்சந் தோஷம்
நெடியவொரு வந்திலொன்று தொலையாச் செல்வம்
நீணரம்பி னதுகோண நிதான வாழ்வு
அடியதனுள் வெடித்திட்டால் ரத்னஞ் சேரும்
அடித்துடைக்கி னிரண்டுசம னகண்ட பூசை
அடியவருக் கிடாறுக்கு மரன்றன் மைந்தன்
ஐங்கரனர் முன்தேங்காய்ச் சகுனம் பாரே. (1)

ஆணிமுடி தானிரண்டு கூற தானல்
அக்கினியாற் பொருளுக்குச் சேத மாகும்
பேணியதி லோடுடனே தெறித்து வீழ்ந்தால்
பிணியாலே வாதையுண்டு பொருளுஞ் சேதம்
நீணியதோர் கண்தெறித்தால் மரண மாகும்
நீளமாய்ப் பிளந்துவிட்டா னிதியுஞ் சேதந்
தாணுவிலே தவறிவிடின் குடும்ப நாசந்
தந்திமுகன் முன்தேங்காய்ச் சகுனம் பாரே. (2)

## முழக்கோல் அளவு

3. பருதியின் திசையில் குதுளியோராயிரம் பார்க்கில்
குதுளியாகும் பாரிலோராயிரம் அனுத்துங்கம்
ஓமஞாதில் குமரிவினல எளஞ யிரமாம்
சுருதியின் பொருளான என்னெட்டு நெந்லுத்துலங்கு
சென்னல்லெட்டு பெடாடுருவிரல் கோராதார சிகொனடங்
குலப்பெருமையைச் சொல்லவே பாதமாகும்

4. மாகாசலத்தை வழிகடைவங்கம் வராமகனைப் பாகவே
மேகராகனங்கள் கிறகத்திஞேடு மீனின் சரிததமுடனே
ஏகாவிராசி உயிர்திதிவாரம் எழில்வங்கனுள்க ளுடனே
நிகாமசிகாமணி யென் னும்நாமம் நெறியாறுரைப்ப நெறியே.

---

3. இதன் வடிவம் துணியக்கூடவில்லை. மிக்க பிழையும் குறையும் உள்ளன. இஃது அளவைகளுள் நீட்டலளவையைக் குறிப்பது என்று இதன் சிதைவுற்ற சொற்குறிப்புகள் காட்டுகின்றன. தமிழ் நாட்டில் வழங்கிய அளவை காரி நாயனூர் என்பார் இயற்றிய கணக்கதிகாரம் என்ற நூலினுள் காணலாம். அது காட்டுமாறு:—

வையணுக்கள் பஞ்சு மயிர்முனை நுண்மணல்
ஐயெள்ளு நெல்லுடனே யவ்விரலாம்—பெய்வளையாய்
எட்டின் வழியெல்லா மேற்றியே யவ்விரல்
சட்டமதாம் பன்னிரண்டு சாண். இதன்படி,

| | | | | |
|---|---|---|---|---|
| அணு | எட்டு | கொண்டது | — | கதிரெழுதுகள். |
| கதிரெழுதுகள் | ,, | ,, | — | பஞ்சிற்றுகள். |
| பஞ்சிற்றுகள் | ,, | ,, | — | மயிர்முனை. |
| மயிர்முனை | ,, | ,, | — | நுண்மணல். |
| நுண்மணல் | ,, | ,, | — | சிறுகடுகு. |
| எள்ளு | ,, | ,, | — | நெல்லு. |
| நெல்லு | ,, | ,, | — | விரல். |
| விரல் | 12 | ,, | — | சாண். |
| சாண் | 2 | ,, | — | முழம். |

இவ்வாய்பாட்டின் சொற்கள் இச்செய்யுளில் சிதைந்துள்ளன காண்க. இதனால் முழக்கோலின் அளவு காண்க.

4. இச்செய்யுளின் உருவம் ஐயத்திற்கு இடனாயுள்ளது. கடலின் வழிச் செல்லும் மரக்கலத்தைச் செய்தற்குரிய கிரக, நட்சத்திர, இராசி, திதி, வாரங்களை வங்க நாள்களுடன் 'நீகம சிகாமணி' என்னும் பெயரால் அமைந்த நூலில் முறைப்படி புரைப்பேன் என்று கூறுவது போலும் இதன் பொருள்.

## லெக்கினம் மறியவகை

5. வடிவானவங்கம் அதைநீளளந்து வருபாகம் அஞ்சுமஞ்சும்
இடுமாறுஒன்றும் மூனறேடோடிரண்டு ஏழோடு ஒன்பதொருபா
னிடமெழுது நடுகனகமாறுகானில் எழிலாகுமென்பர், பெரியோர்
நடமாறு அஞ்சும்பிருநாலும் னாலும்முளதாகில் நன்மையலவே.

என்பது: எராவீ நீளத்தை யளந்து பார்த்துப் பாத்துப் பங்கிட்டு முதல்ப் பதம், இரண்டாம் பதம், மூனாம் பதம், ஆறாம் பதம், ஏழாம் பதம், ஒன்பதாம் பதம், பத்தாம் பதம், பத்திலும் கன்னிடை கருவிடை இலக்கிடை சுழிச்சுடையிது வந்தால்த் தேவையில்லை அஞ்சாம் பதத்திலும் நாலாம் பதத்திலும் இந்த கனு வந்தால் ஆகாதென்றறியவும்.

## வங்கனாளறிய வகை

6. ஏரர்வின்னள மெனதாகு மென்றுயிடுமோர்முழத்தை விரலால்
சோராமப் லெட்டுனாலெ பெருக்கித் துகையான வாளையிவைதான்
சீராடும் யீருவத் தெழாக்கு தன்னினொடு சிரவித்தசேஷம தனால்
ஆராயும் அசுபதி பானி முதலாக எண்ணி அறிந்துகொள்
வங்கனாளே

என்பது: எராவினீளத்தை யளந்து ஒரு முழத்துக்கு யிருபத்துநாலு அங்குலமாகப் பெருக்கிக் கண்ட துகையை இருபத்தேழில் கழித்து நின்ற சேஷத்தை இத்தனையென்று அசுபதி தொட்டெண்ணி கண்ட நாள் வங்கனாள ளென்றறியவும்.

---

5. தலைப்பு—"லெக்கினமறிய வகை" என்பது பிழையெனத் தோன்றுகிறது. இச்செய்யுளிலும் இதன் உரையிலும் மரக்கலத்தின் இயல்பு கூறப்படுவது காணலாம். ஆதலின் இத்தலைப்பு 'இலக்கணம் அறிய வகை' என்றிருத்தல் கூடும். இச்செய்யுளின் நடை ஓசைக்கும் உரைக்கும் இயையக் கீழ்க்கண்டபடி இருக்கலாம்.

வடிவான வங்க மதைநீ ளளந்து வருபாக மஞ்சு மஞ்சும்
இடுமாறி னொன்று மூன்றேடி ரண்டு மேழோடு மொன்ப தொருபான்
இடமேழி னீடு ருக்கண்கள் காணி லெழிலாகு மென்பர் பெரியோர்
நடைமாறு மஞ்சு மிருநாலு நாலு முளதாகி னன்மை யலவே.

இதன் உரை:—ஏராவின் நீளத்தை அளந்து பார்த்துப் பத்துப் பங்கிட்டு முதல் பதம், இரண்டாம் பதம், மூன்றாம் பதம், ஆறாம் பதம், ஏழாம் பதம், ஒன்பதாம் பதம், பத்தாம் பதம் பத்திலும் (எழிலும்?) கண்ணிடை, கருவிடை, இலக்கிடை, சுழிக்கடை இதுவந்தால் தேவை. இல்லாது அஞ்சாம் பதத்திலும், நாலாம் பதத்திலும் (எட்டாம் பதத்திலும்) இந்தக் கணுவந்தால் ஆகாதென்றறியவும், என்று இருக்கலாம். பாட்டும் உரையும் சிறிது பொருந்தவில்லை. ஏரா-கப்பலின் அடிமரம்—Keel.

6. "வங்க நாள் அறிய வகை"—என்பது தலைப்பு.

இச்செய்யுளின் வடிவு பின்வருமாறு இருக்கலாம்.
ஏராவி னீள மெனதாகு மென்னி னிடுமோர் முழத்தை விரலால்
சோராமூ வெட்டி னாலேபெ ருக்கித் தொகையான வாணை யீவைதான்

7. உரைவங்கனுலும் உடையான் தன்னுரும்
வுடனெனழ நின்ற விதியாம்
புரைகண்ட துன்மல் வருகின்றனுமை
வுடனே பொருத்த வுரைநி
நிரைநின்ற துங்கம்வரை நீன்ட தங்குதிரி
திரிகிண்ட வாரி முழுதும்
துரைத்துண்ட வென்றி மிறவங்க மோடி
நொடியின்தன வங்கயருமாம்.

என்பது: வங்கனுளும் முதலாளினுளும் ஒன்டா யிருக்கவேணும். மிருதியு நல்லது, கன்னிடை கண்டதுண்டிலனுளும் ஒன்ருய்த்து மூன்றுக்கும் ஒருந க்ஷேத்திரமானுலும் ஒன்றுடனே ஒன்று உரவான க்ஷேத்திரமானுலும் மிகுதி நல்நதென்றறியவும் பொருந்தாத னுளும் பகை நாளுமாகாது. ஒரு நாளாக இருந்தாலும் பொருந்தின னுளாக இருந்தாலும் இதுக்கு உறவான னுளாக இருந்தாலும் எந்த துரைக்கும் சிந்தாத தாதிரையே ஓடிபோய்ச் சிந்தாத திரையே ஒடிவரும் மென்பது.

---

சீராரு மிருபத்தெழ் தொகைதன்னி னேடு தீர்வித்த சேஷ மதனுல்
ஆராயு மசுவினி பரணிமுத லெண்ணி யறிந்துகொள் வங்க நாளே.

உரை:—என்பது ஏராவின் நீளத்தை யளந்து ஒரு முழத்துக்கு இருபத்துநாலு அங்குலமாகப் பெருக்கிக் கண்டதொகையை இருபத்தேழில் கழித்து நின்ற சேஷத்தை இத்தனையென்று அசுவினிதொட்டெண்ணிக் கண்ட நாள் வங்கநாளென்றறியவும்.

7. இதன் வடிவும் திருத்தற் பாலதே. சந்த நோக்கில் முதலடி தவிர மற்றையடிகளின் வடிவு துணியக் கூடவில்லை.

"உரைவங்க நாளும் உடையான்றன் னுளு முடனொன்ற னின்ற விதியாம்
புரைகண்ட (துன்மல?) வருகின்ற நாளு முடனே பொருந்த வுணர்க.
நிரைநின்ற துங்கம் வரைநீண்ட தங்கு திரிகின்ற வாரி முழுதும்
நுரைதுன்ற வென்றி யுறவங்க மோடி நொடியின்கண் வந்து யருமாம்.

(உரை-திருத்தம்):—வங்க நாளும் முதலாளி நாளும் ஒன்ரு யிருக்கவேண்டும்; மிருதியும் நல்லது. (கன்னிடை கண்டதுன்டில நாளும்?) ஒன்ருய் மூன்றக்கும் ஒரு நக்ஷத்திரம் ஆனுலும் மிகுதியும் நல்லதென்றறியவும். பொருந்தாத நாளும் பகை நாளு மாகாது. ஒரு நாளாக இருந்தாலும் பொருந்தின நாளாக இருந்தாலும் இதற்கு உறவான நாளாக இருந்தாலும் எந்தத் துறைக்கும் சிந்தாத திரையே (?) ஓடிப்போய்ச் சிந்தாத திரையே ஓடி வருமென்பது.

8. வாஷததுவனுர் தலேயிடத்தில் தலேயை வைத்து
வடிவான வாஷததுவனுர் நீண்டநாளில்
கொத்தெழுந்த திசைமுழுதும் அனியம் வைத்தால்
குததமில்லே யெனஉரைத்துக் குருவோர் சொன்னுர்
சொற்திருந்து எராவை வைக்கும்நாலில் திதிகிழமை
வூடுவுரை லெக்கினங்கள்ச்
சலேகதிரங்கன் சொற்படி யிதனேத்
தமிழ் செய்திட்டான்.

என்பது: வாஷத்துவரை தலேயில் தலேயை வைத்து செய்வது, அல்லாது வாஷத்துவனுர் நின்றனுள் முகம் னுேக்கும் திசையில் தலேவைக்கிலும் கூட்டிக்கொள்ளலாம் யென்று முன்னிருந்த பெரியோர்கள் சொல்லி வைத்தார்கள் யென்றறியவும்.

9. நாளும் வாரமும் திதியும் லெக்கினமும்
ஓரையும் வகுத்துஞ் சொல்லும் என்பது
உத்தமனுர் தெரிந்துரைக்கில் முன்னேர் சென்ன
ரோகணியும் பூசமுடன் திருவோணம்
ரேவதியும் வகுத்து மின்னே மத்திபனுள்

---

8. முதலிரண்டடியின் வடிவு இவ்வாறு துணியலாம்.

**எண்சீர் விருத்தம்**

வாஸ்துமனுர் தலேயிடத்தில் தலேயை வைத்து
வடிவான வாஸ்துமனுர் நின்ற நாளில்
கோத்தெழுந்த திசைமுழுது மனியம் வைத்தால்
குற்றமில்லே யெனவுரைத்துக் குருவோர் சொன்னுர்
சேர்த்திருந்தஎராவை வைக்கும்நாளில்
திதிகிழமை யுடுவோரை லெக்கி னங்கள்

பின்னேய நான்காமடி சீர்கள் குறைபட்டுள்ளமையால் அடிவரையறை செய்தற்கு இயலவில்லே. இதன் கருத்து ஒருவாறு "எரா ஆகிய வங்கத்தின் அடிமரம் வைக்கும் நாளின் திதி, கிழமை, நட்சத்திரம், இலக்கினம் இவற்றை (சலேகதி ரங்கன்(?) சொல்லியபடித் தமிழ் நூலாகச் செய்திட்டான்" என்று கொள்ள லாம். இதனுல் ஓர் ஆசிரியன் பெயர் குறிக்கப்படுகின்றது போலும். உரையும் குறைபாடுடையது.

உரை :—வாஸ்துமனுர் தலேயில் தலேயை வைத்துச் செய்வது அல்லாது வாஸ்துமனுர் நின்ற நாள் முகம் நோக்கும் திசையில் தலேவைக்கிலும் கூட்டிக்கொள்ளலாம் என்று முன்னிருந்த பெரியோர்கள் சொல்லி வைத்தார்கள் என்றறியவும்.

9. "நாளும்..............சொல்லும் என்பது" இவ்வடிகள் பின்வரும் பாட்டிற்குக் "கொளு" ஆக உள்ளது. இதன் முதலிரண்டடிகள் ஒருவாறு உணரக்கூடும். பின்னேய விரண்டடிகளும் உணரலாகாவாறு பிழைபட்டுள்ளன. உரைக்கு இயைய முன்னிரண்டடியும் வருமாறு :

அவுட்டமுடன் புனர்வூசந்தான் உத்திரமே
சேரதிபனையாடி தன்னேனே ருணத்திய யின்ன.............டன்
யோரை யோகம்
மெய்த்தியிடு கண்ணுயிர் கொண்டிலம் துண்டாய்
வென்றுநீதி யின்றுமேன் விளம்பினரே.

என்பது: இனி உத்தம னாவது--ரோகணி பூசம் திருவோணம் சதயம் உத்திரட்டாதி ரேவதியும் இந்த ஆறுநாளும் உத்தம னளென்பது. இனி மத்திப நாள் புனர்பூசம் உத்திரம் சோதி அனுஷம் அவிட்டம் உத்திராடம் யிந்த ஆறு னள் மத்திப நாள் என்பது. அதமனள்—அசுபதி பரணி கார்த்திகை மிருகசிரீஷம் திருவாதிரை ஆயிலியம் மகம் பூரம் அஸ்தம் சித்திரை விசாகம் கேட்டை மூலம் பூராடம் பூரட்டாதி இந்த பதினஞ்சு னளும் அதம னளென்பது லெக்கினம் விலக்கப்பட்டது. மிதுனம் கும்பம் மீனம் தனுசு மகரம் அஞ்சு (ஐந்து) லெ(ல)க்னமும் அதம லெ(ல)க்னமென்று கப்பல் வைக்க இறக்க ஓட்ட ஆகாதெனறறியவும்.

## ஓரையுங் கிறகமும் அறியச் சொல்லுகிருர்

10. வாரமுற வானனள் வகுக்குங்காலே மதிபூதனும்
வானவன் தம் குருவு மததும்
சேரதிசை பெருக உன்னும் குருவுமென்னச்
சொல்லுமிவை நல்லமினி துட்டராய்

---

### எண்சீர் விருத்தம்

உத்தமநாள் தெரிந்துரைக்கின் முன்னேர் சொன்ன
உரோகிணியும் பூசமுடன் சதய மோணம்

உரை:—இனி உத்தம நாளாவது—உரோகிணி, பூசம், திருவோணம், சதயம், உத்திரட்டாதி, ரேவதியும் இந்த ஆறு நாளும் உத்தம நாளென்பது. இனி மத்திம நாள் புனர்பூசம், உத்திரம், சோதி, அனுஷம், அவிட்டம், உத்திராடம் இந்த ஆறு நாள் மத்திம நாள் என்பது. அதமநாள் அசுவினி, பரணி, கார்த்திகை, மிருகசீர்ஷம், திருவாதிரை, ஆயிலியம், மகம், பூரம், அஸ்தம், சித்திரை, விசாகம், கேட்டை, மூலம், பூராடம், பூரட்டாதி இந்தப் பதினைந்து நாளும் அதமநாளென்பது: இலக்கினம் விலக்கப்பட்டது மிதுனம், கும்பம், மீனம், தனுசு, மகரம் இந்த ஐந்து இலக்கினமும் அதம இலக்கின மென்று கப்பல் வைக்க, இறக்க, ஓட்ட ஆகாதென்றறியவும்.

10. 'ஓரையுங் கிரகமும் அறியச் சொல்லுகிருர்'—என்பது கொளு. இப்பாட்டின் திருந்திய வடிவம் வருமாறு:—

### எண்சீர் விருத்தம்

வாரமுற வானநாள் வகுக்குங் காலே
மதிபுதனும் வானவர்தங் குருவு மற்றும்
சோரசுரர் பெருகவுன்னுங் குருவு மென்னச்
சொல்லுமிவை நல்லவினித் துட்ட ராய

காரியொடு செயகனவி கழித்த தெல்லாம் கலம்யெடுக்க
இயிறக்க நடத்திடவும் ஆகா
பூரண பொற்குடம் பழித்த தனந்தாள் தங்கள் புக்கிருந்த
சொற்ப் பவளப் பொற்பினளென்

என்பது: திங்கள் புதன் பிறகஸ்பதி சுக்ரன் இவைனலும் சுப யோரை சுபக்கிக மென்பது இனி செவ்வாய் சனி ஞாயிறு ராகு இது பாவக்கிறகம் பாவயோரை யென்றறியவும்.

**புறுவ பக்கமறிய வ்கை சொல்லுவேன்**

11. தொன்றுபுகழ் பதினென் றும் யன்மூன் றைந்தும்
சொல்லிலெழு மூன் றிரண்டும் தூயனலு
யென்றபனி ரென் றுடன்மூ வைந்துமெனக்கு
யீரேழு ஒன்பது பத்தாலும்
ஒன் றுமாண்டா யிருனலிவைகள் ஒன் றுயோரகம்
கா்வெள்ளை தனபழித்த குழைகள்தூவி
மீண்டிரண்டாம் பங்கய யிளஞெருளம் விடாங்கொண்ட
தடங்கொண்ட விழியினளளே.

என்பது: இனி பூர்வபக்கத்து யேகாதசியும் திரயோதசியும் பஞ்சமியும் சத்தமியும் துதியையும் திரிதியையும் துவாதசியும் பௌர்ணமையும் சுப(ம்) நல்லதென்பது. இனி ஆகாத திதி: சஷ்டியும் நவமியும் தசமியும் அஷ்டமியும் பிரதமையும் சதுர்த்தசியும் பவர்ணே பௌர்ணமியும் ஆகாதென்றவாறு.

---

காரியொடு சேய்கனவி கழித்த வெல்லாங்
கலமெடுக்க விறக்கநடத் திடவு மாகா
பூரணபொற் குடம்பழித்த தனத்தாய் முத்தம்
புக்கிருந்த சொற்பவளப் பொற்பி னளே.

என்பது: திங்கள், புதன், பிருகஸ்பதி, சுக்கிரன், இவை நாலும் சுபவோரை, சுபக்கிரகமென்பது. இனி, செவ்வாய், சனி, ஞாயிறு, இராகு இவை பாவக்கிரகம்: பாவவோரை யென்றறியவும்.

11. 'பூருவ பக்கமறிய வகை சொல்லுவேன்' என்பது கொளு.
இச்செய்யுளில் மூன்றாமடியில் அரையடி பின் வருமாறு இருக்கலாம்

**எண்சீர் விருத்தம்**

தொன்றுபுகழ் பன்னொன் றும் பன்மூன் றைந்தும்
சொல்லினெழு மூன்றிரண்டுந் தூய நாளு
மென்றபன்னி ரண்டுடன்மூ வைந்து மென்க
வீரேழொன் பதுபத்தா றும்மொன்றோ டிருநான்
கொன்றுவள்ளை தனைப்பழித்த குழை தாவி
......................................
வென்றிரண்டாம் பங்கயமா யிளைஞோ ருள்ளம்
விடங்கொண்ட தடங்கொண்ட விழியி னளே

இனி, பூர்வபக்கத்து ஏகாதசியும், திரயோதசியும், பஞ்சமியும், சத்தமியும், துவிதியையும், திரிதியையும், (சதுர்த்தியும்,) துவாதசியும், பௌர்ணமியும்

## அமரபக்க திதியில் நன்மை தின்மை யறியச்சொல்லுவது

12. பக்கம் பின்னல்யந் தேழுமூன் று பனமூன் றிரா று
    யிரண்டு பத்தும் பண்ணி
யொக்கும் பன்னலா றும் மூவஞ்செட்டும்
    ஒன்பது பன்னென்று காவுயர்
முகத்துளமிக்க மலத்துமலா கனத்தைக் காயும்
    மெனக்குழலாக சடையமருங்க சையமின்போல்
முக்கியர வஞ்சுகம்போல் மொழியுமாதே முன்னுரைத்த
    பண்ணுலின முறமை தானே.

என்பது: சுபதிதி அறிய.....அமரபக்கத்து பிரதமை துவிதியை(யை) திரிதிகை சது(ர்)தி(த்)தி பஞ்சமி சத்தமி துவாதசி திரயோதசி தசமி இந்த ஒன்பது திதியும் சுபதிதி யெல்லாத்துக்கும் நல்லது..........

## அமரபக்கத்தில் பாவதிதி அறியவகை

அஷ்டமி நவமி ஏகாதசி சஷ்டி சதுர்த்தசி அமாவாசை பவர்ணே இதுகளெல்லாம் ஒன்றுக்குஞ் செய்ய ஆகாதென்றறியவும்.

---

சுபம் நல்லதென்பது. இனி ஆகாத திதி சஷ்டியும், நவமியும், தசமியும் அஷ்டமியும், பிரதமையும், சதுர்த்தசியும் (பௌர்ணமியும்?) ஆகாதென்றவாறு.

குறிப்பு:— உரையில் ஒரு பிழை காணப்படுகின்றது. பூர்வ பக்கத்துத் திதிகள் பதினைந்தனுள் ஆகும் திதியும் ஆகாத் திதியும் வகுத்துக் கூறும் பாட்டில் "தூயகாலும்" என்று ஆகும் திதிமுன் குறித்திருக்க, அஃது உரையில் விடுபட்டுள்ளது. இனி ஆகாத் திதியுள் "பௌர்ணமியை"க் கூட்டி யெழுதியுள்ளதும் பிழையாகும் என்னெனில் "பௌர்ணமி" முதலிற் சொல்லியிருக்கும் "ஆகும் திதிகளுள்" ஒன்று என எடுத்து ஓதியிருத்தலால்.

12. "அபர பக்கத் திதியில் நன்மை தின்மை யறியச் சொல்லுவது" — இது தலைப்பு. செய்யுள் பின் வருமாறு இருத்தல் கூடும்.

எண்சீர் விருத்தம்

பக்கம்பின் னலைந்தே யெழுமூன்று மொன்று
    பன்மூன்றீ றாறிரண்டு பத்தும் பண்ணின்
ஒக்கும்பன் னலாறும் மூவஞ் செட்டும்
    ஒன்பதுபன் னென்றுகா வுயர்முகத்துள்
மிக்ககம லத்துமலர் கனத்தைக் காயும்
    மென்குழல்கச் சிடையமருஞ் சைய மின்சொல்
முக்கியவஞ் சுகம்போல மொழியு மாதே
    முன்னுரைத்த பன்னூலின் முறைமை தானே

என்பது:— சுபதிதி அறிய...........அபரபக்கத்துப் பிரதமை, துவிதியை, திரிதியை, சதுர்த்தி, பஞ்சமி, சத்தமி, துவாதசி, திரயோதசி, தசமி-இஃது ஒன்பது திதியும் சுபதிதி எல்லாவற்றுக்கும் நல்லது.

"அபர பக்கத்தில் பாவதிதி அறியவகை" என்பது தலைப்பு-இதற்கு உரிய பாட்டு ஏட்டில் இன்மையால் விடுபட்டது போலும். உரை மட்டும் உள்ளதாகக் காணப்படுகின்றது. அது வருமாறு: அஷ்டமி, நவமி, ஏகாதசி, சஷ்டி, சதுர்த்தசி, அமாவாஸ்யை, பௌர்ணமி இவைகள் எல்லாம் ஒன்றுக்குஞ் செய்ய ஆகாதென்றறியவும்.

### இனி பாய்மர மெடுக்க லெக்னம்

13. வானிபங் குடஞ்சுறு வலவனெடு யிஷபமும்
பேணிநலவிரு க்ஷி(ச்)சிகம் பேசிநல்ல மத்திவை
பானியி லொடுங்கப்பல் பாய்மரம் யெடுக்கவேதான்
வாகுடன்மென்று முன்னேயோர்கள்தான் நவின்றதே.

### இனி பாய்மர மெடுக்க லெக்னம்

துலாம் கும்பம் மகரம் கற்கடகம் மேஷம் ரிஷபம்விருச்சிகத்தில் சுபக்கிரகத்தில் நிறாக் பாய்மரம் யெடுக்க நல்லதென்றறியவும்.

### வங்கநாள் நிற்குமிடஞ் சொல்லுவேன்

14. கூறு........னு நின்றனள் கும்பினேடுடன் கோள்ளிர்
ஆறுவங்கு விடுவான் வங்கநாள் தனைமறியாத
வாறுகொண்டு மன்று சிந்தானதிசை சீறு(ம்)
மா(ஆ)று வெள்ளியில் செல்லநல்ல தென்பரே.

என்பது:நாவாய்க்கோல் கீறிமேலே மூன்று சூலமும்கீழ்நாள்ளொன்று உள்ள நாள் பனிரென்று அமரப்பிறனள் மூன்று சூலமும் ஆக யிருபத்தெட்டு நாளும் சூரியன் நின்ற நாளிற்கு நடுகும்பில் வைத்து வங்கநாள் உளநாள் பனிரென்று னிலில் வரப் பாத்துக்கொள்ளவும். ஏழுதிசை நோக்கிச் சொல்லவும் யாதொன்று செய்யவும் ஆதித்தனும் சுக்கிரனும் வடக்கே போவது சந்திரனும் அந்தகனும் தெற்கே நோக்குவது பிருகஸ்பதி மேற்கே நோக்குவது செவ்வாயும் புதனும் கிழக்கே நோக்குவது.

---

13. இனி, பாய்மர மெடுக்க இலக்கினம் என்பது தலைப்பு: செய்யுளின் திருத்தவடிவு வருமாறு:—

அறுசீர் விருத்தம்

வாணிபங் குடஞ்சு றுவவ் வலவனு டோடிடபம்
பேணுநல் விருச்சிகமும் பேசிட நலமற் றிவ்வே
பாணியி லோடுங் கப்பல் பாய்மர மெடுக்க வேதான்
(வாகுடன் மென்று முன்னை யோர்கள்தான் நவின்றதே)

இதன் இறுதியடி சொற்குறை பாட்டால் சீர்வகை கொள்ள இடனிலது.
"இனி, பாய்மர மெடுக்க இலக்கினம்" என்பது தலைப்பு.

உரை- துலாம், கும்பம், மகரம், கற்கடகம், மேஷம், ரிஷபம், விருச்சிகத்தில் சுபக் கிரகத்தில் நிற்கப் பாய் மரம் எடுக்க நல்ல தென்றறியவும்.

14. 'வங்கநாள்...........சொல்லுவேன்-கொளு. இச்செய்யுளின் அடிவரையறை பொருள் முதலிய அறிய இடனில்லை. கீழ்வரும் உரைப்பகுதி இச்செய்யுளுக்கு உரியதாகத் தோற்றினும் செய்யுள் வடிவினைத் தெரிந்து கொள்ள உதவு மாறில்லை. இவ் உரைப்பகுதி "யாத்திரைச் சூலம்" அறியச் சோதிட கிரக சிந்தாமணி கூறு முறையைக் காட்டுகின்றது.

### வாஸ்துமனகிடை யறியும் வகை

15. கன்னி துலாந்தேள் கதிரவன் தலைகிழக்கு
மின்னுசிலை மான்தலை குடத்தினொடு தெற்கு
துண்ணுகய லாடெருதி நிடுமுடி மேல்பா
மண்ணுபுளிர் வீணையரி மாமுடி வடக்கே

என்பது: புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மூணுமாதமுந் தலை கிழக்கே. மார்கழி தை மாசி இந்த மூணுமாதமும் தலை தெற்கே பங்குனி சித்திரை வையர்சி இந்த மூணுமாதமும் தலை மேற்கே ஆனி ஆடி ஆவணி இந்த மூணுமாதமும் தலை வடக்கே யென் றறியவும்.

### வாஷத்து மன்கிடை சொல்வேன்

16. யெத்திசை யெண்ணுமாகில் யிரவிதா னிற்கும்போது
அத்திசை காலைநீட்டி அதுக்கெதிர் தலையைவைத்து
மெத்தென யிடக்கைகீழாய் வலக்கைதான் மேலதாக
மைத்தடங் கண்ணினாளே வாஷத்துமன் கிடைக்கும்வாரே.

17. தலைமிகத் தெரியுந்தக........தலைதனில் தலையைவைத்து
கலமரம் மெடுக்கநன்றாம் கடுகவே நீதியுண்டாகும்
வலமிடம் ஆதி........மக வருனாசுரம் வாயாதென்று
பவநெறி அன்புசொன்னார் பூதலத்தோர் தமக்கே.

என்பது வாஷத்துமன் தலையடியில் ஏராவைத்துக் கப்பல் வைத்தால் உத்தமம் வாஷ்த்துமன் தலைமாறிக் கப்பல் வைக்க ஆகாதென்றறிய வும்.

### மேழதலங் குறிக்க அகமெடுக்க கப்பல் வைக்கச் சொல்வேன்

18. கிடஙதான மொருபத்தில் கிலரும்ரிஷபம் மூவேழில்
அடுங்கோள்கடககம் பனிரெண்டில் ஆறிலொன்றில் தேளெட்டில்
குடந்தானொருபத் தொன்றதனில் கூறுமகரம் பனிரெண்றில்
இடந்தான்குறிக்க ஆகுமென்றா யெல்லாத்திசைக்கும் வல்லோனே

---

15. 'வாஸ்துமன் கிடையறியும் வகை'-கொளு. இதிற் கண்ட செய்யுளின் பொருள், சோதிட கிரக சிந்தாமணி "வாஸ்து புருஷன் சிரம் வைத்து நித்திரை செய்யும் திசையும் காலமும்" குறித்த செய்யுளுடன் ஒப்பிட்டு வேறுபாடு காணற்குரியது அது.

வெண்பா

ஆடு விடைகிழக்கா மாவணிதே ளைப்பசிதை
கூடு வடக்காங் குளிர்மிதுனம்-நீடுசிலை
பெண்கும்பந் தெற்காகும் பேசரிய மேற்காமீன்
வண்வாஸ்து சென்னிவைக்கு மால்

என்பது: சித்திரை பத்தில் வைகாசி யிருபத்தொன்றில் அற்பசி பதினொன்றில் ஆவணி ஆறில் கார்த்திகை எட்டில் மாசி யிருபத்தொன்றில் தை பனிரெண்டில் ஏரா ஒழுங்க யிடங்குறிக்க நல்லது மத்த நாலு மாதமும் சூனியமாத மென்றறியவும்.

19. வாஷத்துமன் திசையை மாறி மனைவங்க மெடுப்பிராதில்
சேர்த்தகைய பொருளுங்குணணி செய்தொழி லனைத்தும்பாழாய்
காத் தெழுமரசனாலே கடுகவே கேடுமுண்டாய்
மூற்கமாய் முகூர்த்தமிட்ட முனியையுங் கொல்லுமென்றார்
இப்பால்.

---

18. இச்செய்யுளின் பொருள், உரைக்கும் பாட்டுக்கும் சிறிது பொருந்தவில்லை. உரையின் இறுதியில் மற்ற நாலு மாதமும் சூனியமாத மென்றறியவும் என்றிருத்தலால், எட்டு மாதங்கள் பொருந்திய மாதங்களெனக் கொள்ளவேண்டும். அந்த எட்டு மாதங்கள் பாட்டிற் குறிக்க எண்ணினால் உரையிற் கண்டபடி சித்திரை, வைகாசி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை, மாசி, தை என்ற ஏழுமட்டும் குறித்துள்ளமையால் ஒருமாதம் விடுபட்டது என்றறியலாம் பாட்டின் இரண்டாவது அடியில் கடகம் பனிரெண்டில் 'என்பதற்கு' ஐப்பசி பதினொன்றில் என்பது பொருந்திய பொருளல்ல. உரையில் கண்ட "ஐப்பசி பதினொன்றில்" என்ற தொடருக்கு மூலத்தின் நேர் பெயர் இல்லாமையால் காணவேண்டும். அடுத்த தொடர் "ஆறில் ஒன்றில் என்பதற்கு உரையில் கண்ட" ஆவணி ஆறில், என்பது நேர் பொருள் அல்ல. பின்வரும் தொடர் 'தேளெட்டில்' என்பதற்கு உரையில் "கார்த்திகை எட்டில்" என்பது பொருள் ஒத்துள்ளது. ஆதலால் விடுபட்ட மாதப்பெயர் ஒன்று ஐப்பசியைக் குறித்ததாதல் வேண்டும். இக் குறைகளைக் களைந்து ஒருவாறு செய்யுளின் வடிவும் பொருளும் துணிதல் வேண்டும். சித்திரைக்குரிய பெயர் முதல் தொடரில் இல்லை. இவற்றை நிரப்பின் ஒருவாறு செய்யுள் நிரம்பவும். ஆதலின் செய்யுட் பாடம் பின்வருமாறு கொள்ளலாம் போலும்.

அறுசீர் விருத்தம்

கிடந்த மேட மொருபத்திற் கிளரும் ரிஷப மூவேழில்
அடுங்கோல் கடகம் பனிரெண்டில் ஆளரி யாறில் தேளெட்டில்
குடந்தா னிருபத் தொன்றதனில் கூறு மகரம் பனிரெண்டில்
இடந்தான்குறிக்க ஆகுமென்று ரெல்லாத் திசைக்கும் வல்லோரே.

19. இதன் திருத்தமான பாடம்

அறுசீர் விருத்தம்

வாஸ்துமன் திசையை மாறி மனைவங்க மெடுப்பீ ராகில்
சேர்த்தகைப் பொருளுங் குன்றிச் செய்தொழி லனைத்தும் பாழாய்க்
காத்திடு மரச னாலே கடுகவே கேடு முண்டாய்
மூர்த்தமாய் முகூர்த்த மிட்ட முனியையுங் கொல்லு மென்றார்.

20. மாவினெடு சூழ்காவு பூரமூன்று
காகம்அங்கி செங்கை தனுவார வங்கம்
காவி பெருவிழி மடவார் ஆடைகேட்டை
கண்டமிவை கலமெடுக்க யிறக்காலாகா
தாவுபரி குடைசிவிகை தன்று தாளம்
தடமுக தெடவுடைய தாதி வெள்ளம்
பாவலர்தன் தமிழ் குதவுபரசை வேந்தன்
பண்ணுமிவை நன்மை யென பகர்ந்திடாயே.

மாதம் பத்துக்கும் நன்மை தின்மை சொல்லுகிறார் :

21. ஒண்டிலாண்டில்........னறெழிசுஞ் நைந்து பொல்லாது
ஒன்பதுபத்தெழுஞ்சுஒரு நாலுதடனெனு மன்றிலங்கு
ஆறிழிஞ்சுயிரு னுமானம் வைத்தோரணியத்தை முதலாககொன்று
பண்டுசொன்ன நூலதனல்பரிசுபாத்து பத்தாகக் கூரிட்டு
பலன்கள் பாரே

## இப்பால் வசனு

மேல்நாள் கொண்டு நன்மை தின்மை யறியவகை :

22. தன்னையே பருதிநோக்கித் தானினி திருக்குருந்தபோது
முன்னமே மனல பாபமிமுடுக ஓராபச்சூள்
அன்னதோர் யலகைமூன்றும் ஆகமேயமைத்த பின்னை
மன்னிய நடுவிற்சூலம் மாதாலை மூன்றுசூலம்

வசனு உரை சொல்லுகிறார். சூரியனை நோக்கி நேரேயிருந்துகொண்டு ஆதரவத்த சூரிய நின்ற ராசியை நோக்குவது னெக்கயிருந்து நலமணல் பரப்பி நெடுக மூனு கீத்துக்கீறி குறுக்கே ஏழுகீத்தும் மேலே மூனு சூலமும் காண ஒன்பது அணியப் பிறனுள் மூன்றும் அமரப்பிறநாள் மூன்றும் நடுப்பண்ணிரே....மெறையும் நாள் பாதாள நாளென்றும் ஆக இருபத்தெட்டு கண்டுகொள்வது.

---

20. இஃது எண்சீர் விருத்தம் "இப்பால்" இச்சொல்லுக்குப்பின் தொடர் மொழி இன்றியிருப்பதால் செய்யுளின் தலைப்பு இன்ன தென்றறியு மாறில்லை. "கல மெடுக்க விறக்கலாகா" என்ற தொடர் மரக்கலம் எடுக்கவும் இறக்கவும் ஆகாத இயல்புகளைக் குறிப்பதாகும். இப்பாட்டின் பிற்பகுதியில் "பாவலர்தண் தமிழ்க் குதவு பரசை வேந்தன் பன்னுமிவை நன்மையெனப் பகர்ந்திடாயே" என்றுள்ளது. இந்நூலாசிரியர் சுட்டிக் கூறும் ஒரு தமிழ் நாட்டு மன்னன் பெயர் வெளிப்படுப்பதாகும் என அறிக.

21. மாதம் பத்துக்கும் நன்மை தின்மை சொல்லும் இந்தப் பாட்டு மிகச் சிதைந்து பொருள் விளங்க இடமின்றி யுள்ளது. இறுதியடி யாகிய "பண்டு சொன்ன நூலதனற் பரிசு பார்த்துப் பத்தாகக் குறிட்டுப் பலன்கள் பாரே" என்பது என்பது எண்சீர் ஓசையுடையதாகலின் இஃது எண்சீர் விருத்தம் எனக் கொள்ளலாம். சிதைவினைப் பொருள் நோக்கி நிரப்புமாறு இல்லை.

22. இதுவும் சிதைந்துள்ளது. உரையும் சிதைந்து தெளிவு தருமாறு இல்லை.

23. சுலமே ஒன்பதாகநிற்க தொக்கநாள் பிறத்திலாறும்
    வாசிபாதாழத்தொன்றும் வயங்கொள பண்ணிரெண்டும்
உள்ளேஎல்லே யிருவத்தெட்டும் எண்ணியே கொள்கப்பித்தை
    கோலியேகூட மப்பின்மீதே குறித்தநாள் நடத்துமென்றார்.

24. நடந்தநாள்பருதி தொட்டுநாட்டுக உச்சிமீதே
    துடந்தனுள் வலமேவந்து சொல்லுகநன்மை தின்மை
வடந்தரும் கும்பின் மூன்றுமறுவொடு வங்கம் பாடாம்
    கிடந்தபின் அணியச்சூலம் கிளம்பிடில் முறியுமென்றார்.

வசனம்: நடுச்சூலத்தினடுவே பொழுதுடனே நடக்கிற நக்ஷத்திரத்தை வைத்து வல்பிறமாக எண்ணிவருகையில் அந்த வங்கனுள் வந்தாள் உள்நாள் பணிரெண்று(டு)ம் உத்தமம் மத்தப் பிறநாளாறும் மத்திபம் மத்தைச் சூலநாள் ஒன்பதும் பாதாளநாள் ஒன்றும் ஆக பத்து நாளும் ஆகாது யென்றறியவும்.

நடுசூல மூன்று மனுவு வங்கமுஞ் சேதப்படும். அணியச் சூலநாள் மூன்றுங் கப்பல் சேதப்பட்டு முறிந்துபோம். அமர சூலமும் முறியுமென்று சொல்லி பின்னையும் வசனஞ் சொல்லுகிறார்.

25. முறிந்தபி னடினுளில் முதல்வனுந் தானுமங்கோர்
    பிரிந்தன மறுக்களெல்லாம் பின்மறப் பிறனுள்மூன்றும்
அறிந்தபின் தெரிந்துகொண்டு அணியபே........ பிறநாள்மூன்றும்
    செறிந்திருக்கனவு சேருமென் றுரைத்திடாயே

வசனம்:

அடிநாளாகில் மனுவும் வங்கமும் வேறுபட்டழிந்து போம் அமர்பிறநாள் மூன்றும் அக்கரையில் பாடா வீதி கிடக்கும். உள்ளகத்தாறு நாறும் மேலாரையில் மிகுதிஇத்தமம் சீக்கிரத்தில் வந்து துறை சேரும். உள்ளகத்து கீழை அறை ஆறு நாளும் வருத்தப்பட்டுத் துறைபிடிக்குமென்பது இயல்கு. உரையும் காலமுஞ் சொல்வது மிதுனம் கன்னி தனுசு மீனம் இதுனலு ராசியும் ஆகாதென்றறியவும். இப்பால்:

---

23,24. இவ்விரண்டு பாடல்களும் முன்னைய 22-வது பாட்டினைத் தொடர்ந்தவையாகும். இவையும் சிதைவுற்றுள்ளன. இவை ஒருவாறு பின்காட்டியபடி இருக்கலாம்.

**அறுசீர்**

சூலமே ஒன்ப தாக (நிற்க?) தொக்கநாள் புறத்தி லாறும்
(வாலம்)(வாசி?) பாதாளத் தொன்றும் வயங்கொளப் பன்னி ரண்டும்
எலவே யிருபத் தெட்டு மெண்ணியே கொள்க யிற்றைக்
கோலியே கூம்பின்மீதே குறித்தநாள் நடத்துமென்றார்.
நடந்தநாள் பருதி தொட்டு நாட்டுக வுச்சி மீதே
தொடர்ந்தநாள் •வலமே வந்து சொல்லுக நன்மைதின்மை
வடந்தருங் கூம்பின் மூன்று மனுவொடு வங்கம் பாடம்
கிடந்தபின் னணியச் சூலம் கிளம்பிடின் முறியு மென்றார்.

25. இப்பாடலின் இறுதியடியில் சீர்குறை. இடையினும் எழுத்துக் குறையுண்டு.

26. ஆகாத யோரையன்றி ஆகிய ராசிசெப்பில்
மாகாரும் குண்டகும்பம் மகரம்தேள் மேஷமத்து
நாவாய்கொள்நாளில் நல்லநாள்க் கொண்டுரைத்த பின்னை
நீகாமதாமும் கொள்ளுர் நின்றிடும் வியாழம்வெள்ளி

இனி ஆன ராசியாவது: ரிஷபம் கும்பம் மகரம் விருச்சிகம் மேஷம் இந்த ஐந்து ராசியும் உத்தமமென்றறியவும். இனி வசனம்:

27. வெள்ளிதன் கால்ஓரை மிகுந்திடும் நீர்தாகும்
ஒள்ளிய திங்களாகில் உணர்ந்துநீ ரருவங்கண்ணும்
வள்ளிய புத்தியாகில் மரம்பல முறியுமென்றூர்
கொள்ளு ஞாயிறுசனியும் தீர்த செவ்வாயுமாகா

என்பது: வெள்ளி ஓரை நீர் காட்டும். சந்திரனுகில்க் காயப்படுத்தும் புதனுகில் பாய்மரம் பருமல முறியும் சூரியனும் அங்காரகனும் மந்தனும் ஆகாத நாளென்றறியவும். இப்பால் வசனம்:

28. பொல்லாத ஓரை பன்னிபொருந்திடு விசாழும்கன்றே
யெல்லோரும் சொன்னூர்களென்றயெருந்திவை யனைத்தனுலால்
நல்லாரை உதையங்கொண்டு நாகத்தை கழித்துபோட்டு
அல்லாத திசைக்கொளெல்லா மகத்துக வெனவுரைத்தார்.

வசனம்: எல்லா ஓரையும் விசாஷ ஓரையிலும் விசாஷக் கிரகமும் கொண்டு செய்யவும். மத்தது தள்ளிவிடுவது.

---

**26. இதன் திருந்திய வடிவம் கீழ்வருமாறு:**

**அறுசீர்**

**ஆகாத வோரை யன்றி ஆகிய ராசி செப்பில்**
**வாகாரும் குண்டை கும்பம் மகரந்தேள் மேஷ மற்று**
**நாவாய்கொள் நாளின் நல்ல நாள்கொண்டிங் குரைத்த பின்னை**
**நீகாமர் தாமும்கொள்ளா நின்றிடும் வியாழம்வெள்ளி.**

**27. இந்தப் பாடலும் திருந்தவேண்டும். அது வருமாறு:**

**அறுசீர்**

**வெள்ளிதன் கால வோரை மிகுந்திடு நீர தாகும்**
**ஒள்ளிய திங்க ளாகி லுணர்ந்தநீ ரருவங் கண்ணும்**
**வள்ளிய புந்தி யாகின் மரம்பல முறியு மென்றூர்**
**தெள்ளிய ஞாயி றோடு சனியுஞ்செவ் வாயு மாகா.**

**28. இதன் திருத்த வடிவமாவது:**

**அறுசீர்**

**பொல்லாத வோரை பன்னிப் பொருந்திடு விசாள மன்றே**
**யெல்லாருஞ் சொன்ன ரென்றே யெழுதிய வனைத்து நூலால்**
**நல்லோரை யுதயங் கொண்டு நாகத்தைக் கழித்துப் போட்டு**
**அல்லாத திசைக்கோ ளெல்லா மகற்றுக வெனவு ரைத்தார்.**

விருத்தம்

29 கொள்ளுமா முகூர்த்தமெல்லாம் கோவணி நயனங்கூப்பில்
தெள்ளிய வாயுவோடு திசையொரு நான்குமாகா
கள்ளவிழ் கோகைமாதே காட்டிய கணிதமெல்லாம்
புள்ளிகள் படாதவண்ணம் பொருந்தகப் பூமிமீதே

சகலமான முகூர்த்தமுங் கொள்ளுநாளும் கூம்பினெடுத்தோடெண்ணவும். இனி வாயுவின் திசை வடமேற்கு சோமன் திசை வடகிழக்கு அக்கினி திசை தென்கிழக்கு நிருதி திசை தென்மேற்கு இந்த நாலு திசையும் விலக்கப்பட்டது. முன்னேக்கிப் போக ஆக(ா)தென்பது நாள்வரறுவ திட்டி சகலமும் பார்க்கச்சே புள்ளி படாமல் நிலத்தில்த் தீர்கமாகக் கீறிபார்க்கவும்.

விருத்தம்

30. எண்ணிய சூலமூன்று இசைந்தபாதாள மொன்று
நண்ணிய பிறநாளாறு நாட்டுக மத்தியமீதேறெ
தண்ணறுங் குழிவினளே தடங்கடல் ஓடவங்கம்
பண்ணவும் பணிசெய்யும்பாய் வாங்கநாள் பாயவேணும்

இதை எண்ணிக் காண வகை—சூல மூன்றி லொன்பது நாளும் அதமம். கீழ்நாளொன்றும் பிறநாளாறும் மத்திபம் உள்ளுள் பனி ரெண்டும் உத்தமம் என்றறியவும்.

---

29. இஃது அறுசீர் விருத்தமாகும். இதுவும் திருந்தியபடி வருமாறு:

கொள்ளுமா முகூர்த்த மெல்லாங் கோவணி நயனங் கூம்பில்
தெள்ளிய வாயு வோடு திசையொரு நான்கு மாகா
கள்ளவிழ் கோதை மாதே! காட்டிய கணித மெல்லாம்
புள்ளிகள் படாத வண்ணம் பொருந்துக பூமி மீதே.

30. இச்செய்யுள் உரைக்கு இயையத் திருத்தமாதல் வருமாறு :

அறுசீர்

எண்ணிய சூல மூன்றி லிசைந்தபா தாள மொன்று
நண்ணிய பிறநா ளாறும் நாட்டுமத் திமமீ ராறே
தண்ணறுங் குழலி னளே! தடங்கட லோட வங்கம்
பண்ணவும்....................................

(இறுதியடிச் சீர்கள் மிகைபடவுள்ளன)

31. கூம்பின்மேல் சூலம்நாவாய் குறையிலா துறையில்கேடா
மதம்பட்டு அமரச்சூலந் தாழ்ந்திடு மையந்தன்னில்
ஓம்படு அணியச்சூலம் உண்மையாங் கரைகண்டங்கே
தாம்படு மென்னசொன்னர் தகைவில்லா நூல்வல்லோரை.

ஏழுசீர் விருத்தம்

32. அணியநாள் பிறநாளாகில் அக்கரைப் பட்டிரான்டில்
பணிவில் தாய்தமாமீன் பேசிய அமரநாளில்
துணிவிலா திக்கரைக்கே சூழ்ந்துட னிருக்குமென்றூர்
பணியும் பாதாளநாளில் பாதியும்பாடாவிரி வீதிகுறுட்டுநாள்

33. பொல்லாநாளில் கோவினள கலன்கள் செய்யார்
அருக்கனுஞ் சனியுஞ்செவ்வாய் அணைத்துட நிற்குமாகில்
மரக்கலந் தன்னில்வேறு சரக்குடனழி உண்டாமே

34. மிகுதியாம் கன்னிசெல்லும் வில்லெனு மிராசிதன்னில்
கதியேதலங்கள் செய்யார் கடுகவே இறக்கவேண்டாம்
மிகப்படச் செய்வீராகில் வீறணி துரைக்கவன்றே
தகவில்லா வங்கந்தானும் தாழ்ந்துபின் கேடதாமே.

---

31, 32, 33, 34. இந்த நான்கு செய்யுட்களும் வெவ்வேறென வரையறைப்படுத்தி உணர இடன் இன்றி ஒருசேர எழுதப்பட்டுள்ளன. இவற்றுள் சிதைவுகளும் உள்ளன. ஒருவாறு உருப்படுத்தி நோக்கின் பின்வருமாறு இருக்கலாம்.

அறுசீர்

கும்பின்மேல் சூலம் நாவாய் குறையிலா துறையில் கேடா
தாம்பட்டிங் கமரச் சூலந் தாழ்ந்திடு மைய்யந் தன்னில்
ஓம்பட அணியச் சூல முண்மையாங் கரைகண் டங்கே
தாம்படு மென்னச் சொன்னர் தகைவில்லா நூல்வல் லோரே.

32. அணியநாள் பிறநா ளாகி லக்கரைப் பட்டோ ரான்டில்
பிணிவில தாய்த மாமீன்(?) பேசிய அமர நாளில்
துணிவிலா திக்க ரைக்கே சூழ்ந்துட னிருக்கு மென்றூர்
பணியும்பா தாள நாளிற் பாதியும் பாடா வீதி.

இந்தச் செய்யுளின் அடிகளோடு வருஞ்செய்யுள் ஆகிய 33-வதின் முதலடி தவறுதச் சேர்த்து எழுதியுள்ளது. அதனைப் பிரித்து முப்பத்துமூன்றுஞ் செய்யுளாகக் கீழ்வருவதனைக் கொள்ளுக.

33. குருட்டுநாள் பொல்லா நாளிற் கோவினற் கலன்கள் செய்யார்
அருக்கனுஞ் சனியுஞ் செவ்வா யணைத்துட னிற்கு மாகில்
மரக்கலந் தன்னில் வேறு சரக்குட னழிவுண் டாமே.
(இதன் இறுதியடி சுவடியிற் காணப்படவில்லை)

34. மிகுதியாங் கன்னி செல்லும் வில்லெனு மிராசி தன்னில்
கருதியே கலங்கள் செய்யார் கடுகவே யிறக்க வேண்டா
மிகப்படச் செய்வா ராகில் வீறணி துறைக்க வன்றே?
தகவிலா வங்கந் தானுந் தாழ்ந்துபின் கேட தாமே.

3

35. அஞ்சி மகமும் அனுஷசத் தொருமூன்றும்
ஒன்பது கார்திகையும் ஓரெட்டும் ரோகணியும்
நன்றுநால் சூத்திரமும் நற்கலங்கள் செய்யில்
ஒன்றுமிக மறச்சொன்னர்.... இவ்வாண்டு டிவ்வாதே.

வசனம் சொல்லுகிறுர் :

பஞ்சமியும் மகமும் திரிதிகையும் அனுஷமும் நவமியும் கார்த்திகையும் அஷ்டமியும் ரோகணியும் சதுர்த்தியும் உத்திரமும் சென்று நின்ற நாளில்க் கப்பல் வைத்தால் ஒரு வருஷ முடியும் முன்னே அழிஞ்சுபோமென்பது.

36. மூங்கில மூறசறுள உத்திராடம் பனை தாங்கு புள்ளிவைதான்
சந்திரன் பேரில்
நாங்கு நற்கலம் வைத்திடில்க் கலம் தீங்கு திடலை
தீந்திடுஞ் செல்வமே.

உத்திரம் உத்திராடம் அனுஷம் அவிட்டம் சந்திரனுடனே கூடி நின்றது மேலா நாளில் கப்பல் வைத்தால் அந்த கப்பல் சிந்தாத்திரையாய்ச் செல்வம் பெருகி வாத்திச்சிருக்கும் என்பது.

பிறகஸ்பதியும் சுக்கிரனும் உதயத்தில் நிற்க நாலாமிடத்தில் சந்திர நிற்க கப்பல் வைக்கிலும் யாத்திரை செய்மிலும் நன்மையென்பது.

37. ஓரிடத்தில் சுக்கிரனும் பீதகனும் ஒக்க நிற்க, கதிரோக கறுயிடத்தில் சந்திரனுந்தானிற்க நேரொக்க நிற்கச்சே ஓடுமேனிடும் நெதியுங் குணர்ந்து வெத்தியுடன் மீனும் விரைந்து இனி பிருகஸ்

---

35. இது கலிப்பா ஆகும். இதன் திருத்தம் வருமாறு :
அஞ்சின் மகமும் அனுஷத் தொருமூன்றும்
ஒன்பதுங் கார்த்திகையு மோரெட்டும் ரோகிணியும்
நன்றுநா லுத்திரமும் நற்கலங்கள் செய்யில்
ஒன்றுமிகா மற்செல்லா தாண்டுமிங் கொவ்வாதே.

36. இந்தப் பாட்டு அடிவரையறை யின்றித் தொடர்பாய் எழுதியுள்ளது. உரைக்கு ஒப்ப இது திருத்தம் பெறல் வேண்டும்.
பாங்கின் மாரிநா ளுத்திரா டம்பனை
தாங்கு புள்ளிவை தான்சந்தி ரன்பேரில்
நாங்கு நற்கலம் வைத்திடி லக்கலம்
தேங்கு நீடலை சேர்ந்திடுஞ் செல்வமே.
(மாரிநாள்—உத்திரம், பனை—அனுஷம், புள்—அவிட்டம்.)

பதியும், சுக்கிரனும் உதயத்தில் நிற்க நாலாமிடத்தில் சந்திர நிற்க வைத்த கப்பலும் யாத்திரை செய்த கப்பலும் சிந்தாத்திரையாய் ஓடிபோய் திரவிய லாபம் பெருகி வெத்தியுடன் வருமென்பது.

**வெண்பா**

38. விட்டிய ஓரைநின்றேன் விளங்கிய வெவ்வாய்நின்றேன்
அஷ்டமி விருத்தைநின்றேன் அரவமும் சனியுநின்றேன்
திட்டிதா னிரண்டுமூன்ருய் சீவனுமுண்டாமாகில்
கட்டிய களங்கஎெல்லாம் கடுகவந் தில்லஞ்சேரும்.

என்பது: விட்டி விருத்தை நின்ருலென்ன பாவக்கிரக நிற்க நின்ரு லென்ன திட்டியுஞ் சீவனும் உண்டானல் வைத்த கப்பல் சிந்தாத் திரையாய் ஓடிப்போய் ஓடிவருமென்பது.

39. ஒருகண்டுன டென்னும் தியங்கமீழ்க்குத்தம் கதிரோர்காகா
இருகண்ணுண்டானல் பக்கமாயோ ரவர்க்கு மின்பமேயிதும்
இருகண்ணு மில்லாநாளில் ய.......................................
கருமந்திதாய்திரவிய சுத்தத்தோடும் கெடுமென விளம்பினரே,

என்பது: ஒரு கண்ணுண்டாகிலும் திங்கள் குத்தம் கதிரோர் காகசூரியனுக்கு ஆகாது. ரெண்டு கண்ணும் பூரணமாக இருக்க வேணும். சூரியதிஷ்டி சந்திரதிஷ்டி ராஜதிஷ்டி கிறகதிஷ்டி பக்க திஷ்டி யெல்லாமுண்டாகச் செய்த மனே வங்கம் இவையெல்லாம்

---

37. இந்தப் பாட்டு வசனம்போல எழுதப்பட்டுள்ளதாயினும் வெண்பா யாப்பினல் அமைந்தது எனத் தோற்றுகின்றது. பிழைபட்டுள்ளவைகளைத் திருத்தினல் இதன் வடிவம் இவ்வாறு அமையும். உரைப்படி நோக்குக:

**வெண்பா**

பேருதயஞ் சுக்கிரனும் பீதகனு மொக்கநிற்க
(?) சந்திரனுந் தானிற்க — நேரொக்க
நிற்கச்சே ஓடுமெனி னீடுநிதி யுங்கொணர்ந்து
வெற்றியுடன் மீளும் விரைந்து.

(இதன் இரண்டாமடி முதற்சீர் புரியவில்லை)

38. இந்தப் பாடல் வெண்பா என மூலத்தில் தவருக எழுதியுள்ளது. இது விருத்தப் பாட்டேயாகும்:

**அறுசீர்**

விட்டிய வோரை நின்றேன் விளங்கிய செவ்வாய் நின்றேன்
அட்டமி விருத்தை நின்றேன் அரவமுஞ் சனியு நின்றேன்
திட்டிதா னிரண்டு மூன்ருய்ச் சீவனு முண்டா மாகில்
கட்டிய கலங்களெல்லாம் கடுகவந் தில்லஞ் சேரும்.

என்பது திருத்தம் ஆகும்.

யாதொண்டு செய்யவும் யாத்திரை போகிலும் சகலபேருக்கும் தனலாபமும், சுகமும் உண்டாம். கண்ணில்லாத குருட்டு நாளில் சுத்தத் தோடுங் கெடும் ஒரு கண்ணுண்டாமாகில் மத்திபமென்றறியவும்.

விருத்தம்

40. வெள்ளி ரெண்டு புதன் மூன்றும்
வியாழம் நாலும் சனி எட்டும்
தெள்ளிய செவ்வாய் ஒன்பது திகழும்
தீயோர் பன்னொன்று
கொள்ளு மிரவி பனிரென்றிடில்
கூடிப்பாற் கலப்பாரென்றே
தெள்ளிதாய் நன்நூல் வல்லோர்
தெரிந்தவர்க் குறைத்த படிதானே.

இது வசனம்: சுக்கிரன் இரண்டாமிடத்திலும் புதன் மூன்றாமிடத்திலும் பிருகஸ்பதி நாலாமிடத்திலும் சனி எட்டாமிடத்திலும்

---

39. இந்தப் பாட்டு சோதிட கிரக சிந்தாமணியில் உள்ளதாகும், இங்குப் பல பிழை பட எழுதியுள்ளது. அந்நூலிற் கண்டபடி:

ஒருகண்ணுண் டேனுந் திங்கட் குத்தமங் கதிரோற் காகா
இருகண்ணுண் டான பக்கம் யாவர்க்கு மின்ப மெய்தும்
இருகண்ணு மில்லா நாளி லியற்றிய கருமந் தீதாய்
விரவிய சுற்றத் தோடு,கெடுமென விளம்பி னாரே.

இந்தச் சுவடி தமிழறிவு நன்கு அமையாத ஒருவரால் எழுதப்பட்டுள்ளதென்பது இந்நூலிற் கண்ட பல பாடலாலறியலாகும். இதற்கு முன்னுள்ள கப்பல்பற்றிய பாடல்கள் யாவும் பயில வழங்காத ஒரு சுவடியின் பாடல்கள். அவற்றைப் பல பிழைகள் நிரம்ப எழுதியுள்ளார். அவற்றைப் படிப்பார் படும் வருத்தம் அளவிடுதற்கு உரியது அன்று. உரையும் பிழை.

இதன் உரைப்பகுதியின் திருத்தம்: ஒரு கண்ணுண்டாகிலும் திங்களுக்கு உத்தமம் கதிரோற்காகா—சூரியனுக்கு ஆகாது. இரண்டு கண்ணும் பூரணமாக இருக்க வேண்டும். சூரிய திருஷ்டி, சந்திர திருஷ்டி, ராஜ திருஷ்டி, கிரக திருஷ்டி, பக்க திருஷ்டி யெல்லா முண்டாகச்செய்த மனை, வங்கம் இவையெல்லாம் யாதொன்று செய்யவும், யாத்திரை போகிலும் சகலபேருக்கும் தனலாபமும், சுகமும் உண்டாம். கண்ணில்லாத குருட்டுநாளில் சுற்றத்தோடுங் கெடும். ஒரு கண்ணுண்டாமாகில் மத்திம மென்றறியவும்.

40. இந்தப் பாடலின்மூலம் உரைக்குச் சிறிது ஒவ்வாதுள்ளது. இரண்டாமடி 'தெள்ளிய செவ்வாய் ஒன்பது' என்பது ஓசை சிதைவுள்ளது. அன்றியும் உரையில் உள்ள "அங்காரகன் பத்தாமிடத்திலும்" என்ற தொடர்க்கு பொருந்த வில்லை. ஆதலால் திருத்தம் வேண்டும். இனி திருத்தம் ஆவது:—

ஆவகாரகன் பத்தாமிடத்திலும் சந்திரன் பதினோராமிடத்திலும் சூரியன் பனிரெண்டாமிடத்திலும் கூடின முகூர்த்த லெக்கினத்தைப் பாத்தாவது வங்கவளையாவதுப் பார்க்கில்ப் பாழமென்றறியவும்.
இப்பால் சூரிய-திஷ்டி :

41. வெள்ளியில் முகூர்த்த மோருலகந் தழைக்கும்
ஒள்ளிய விசா(யா)ழும் ஒருகோடி பகைவெல்லும்
தெள்ளிய புதனிடை நூறுயிரந் தீரும்
கொள்ளுக முகூர்த்தமிந்த கொள்ளுகப் பாக்கத்தானே.

வெள்ளி உதயத்தில் முகூர்த்தம் விசா(யா)ழும் உதயத்தில் முகூர்த்தம் சொனனபம உத்தமம்.

42. வெள்ளிபுந்தி விசா(யா)ழ மெனுமிவை
ஒள்ளிதாக உதயத்தில்
தெள்ளிதாய் வரும் திக்கொளி கொக்கெலாம்
தள்ளி ஓடிடு மென்றிவை சாத்துமே.

43. என்பது : மேற்கு கதிரோ நின்ற நாளும்
அத்தரும் மூன்றுங் கோதறு பின்னில்
முன்டொருகன் குருட்டுனள்
என்று கொள்கவே தியாதற்கு
நன்ஞ லெதிரமது மொருகண் காணும்
ஏதமில் நின்றநாள் களிருகண்ணுடை
ருக்கரக் கண்ணே.
இந்தபடி கொள்வா முளர். சூரியன் நின்ற மகாநக்ஷத்திரத்துக்கு முன் உருகண் பின்மூன்றும் முன்மூன்றும் ஆகக் குருட்டுநாள். ஆறு சந்திரதிருஷ்டி அதற்கு முன் நாலுனளும் பின் நாலுநாளும் மத்தப் பதிமூன்று நாளும் இரண்டு கண்ணுமுள்ள நாள் யென்றறியவும்.

---

அறுசீர்

வெள்ளி ரெண்டும் புதன்மூன்றும் வியாழன் நாலுஞ் சனியெட்டுந்
தெள்ளு செவ்வாய் தான்பத்தும் திகழுந் திங்கள் பன்னொன்றுங்
கொள்ளு மிரவி பன்னிரண்டும் கூடிப் பார்க்க கலப்பரென்றே(?)
தெள்ளி தாய்நன் னூல்வல்லார் தெரிந்தார்க் குரைத்த படிதானே

41, 42-ஆவது பாடல்கள் சீர்கள் பிழைபட்டும் உள்ளன.

43-வது பாடல் மிகப் பிழைபட எழுதியுள்ளது. இது சோதிட கிரக சிந்தாமணியில் "ஆதித்த பார்வை" என்ற தலைப்பின்கீழ் வந்த பாடலாகும். இது வருமாறு:-
மேதகு கதிரோ னின்ற நாளும்மற்றதன்மேன் மூன்றுங்
கோதறு பின்னின் மூன்றுங் குருட்டுநா ளென்று கொள்க
ஓதிய வதற்குப் பின்முன் நான்குநா ளொருகண்காணும்
ஏதமி னின்றநாள்க ளிருகண்ணுண் டருக்கற் கென்றே.

இன்னமொரு வழிவிலரவி சேர்னுளுக்கு
முன்மூன்றும் பின்மூன்றும் நிறைநிறை மெயழ
அருக்கனு ளாகுமாநிறை நிறையேழ முன்னெருகண்
ஆறிருஆறிருகண் மூன்றெருகண் மூன்றெருகண்ணுக
ஆறிருகண்முன் றெருகண்ணுகமொழி.

சூரிய நின்ற நாளும் முன் மூன்றுநாளும் குருட்டுநாள். பின் மூன்றுநாள் ஒத்தைக்கண். அதின்பின் மூன்று ஆறுநாள் ரெட்டைக் கண். அதின்பின் மூன்றுநாள் ஒத்தைக் கண்ணென்பது

44. அருக்கனுர் கிழமை ஆதிசென்ற வக்கிழமை
அய்ந்தும் பெருக்கி மூன்றதனுல் யெத்தமாமுகற் களித்துப்பின்னை
இருக்குநா ளென்பார் பன்னிரெல்டு கண்காணும்
தரிக்கலா பன்னீராறும் குருட்டுளுள் சந்திரனுக்கே.

45. பருதி முதலாக பாங்காக முந்தித்து
குதிரை முதலாக நாளக் கழித்து
எதிராகும் ஒன்பது ஒற்றைக்கண் யீராறு
ரெட்டைக்கண் நின்றதுவே யேழும் குருடென்பது.

சூரியன் நின்ற நாளை இன்னுளென் றறிந்து அன்றுமுதலாகத்தான் முகூர்த்தங் கொள்ளும் நாளை யெண்ணிக் கண்டத்தை முந்தித்துக் கண்ட துகையை யிருபத்தேழில் மேல்பட்டால் இருபத்தேழில் கழித்து நின்ற சேஷத்தை அசுபதி தொட்டு எண்ணிப்பாற்கில் ஒன்பதுநாள் ஒத்தைக்கண், மத்த பனிரெண்டுநாள் ரெட்டைக்கண் நின்றது. ஆறுளும் குருட்டுநாளென் றறியவும்.

சந்திர திருஷ்டி முற்றும்.

---

இதனைக்கொண்டு மூலத்தைச் செப்பம் செய்து கொள்ளுக. பிழைமலிய எழுதிய சுவடியிற் பிழைகள் களைதல் அறிஞர்க்கு எளிதின் இயலாத செயல் ஆகும். மணற்சோற்றில் கல்லாய்வதுபோல் ஆகும். இதன் உரைப்பகுதிப் பின்பு "இன்னம் ஒரு வழியில்" என்று தொடங்கி ஒரு வெண்பா வரையப்பட்டுள்ளது எனத் தெரிகிறது.

பின்பு உரைப்பகுதி.

44-வது பாடல் குறிப்பு:—"அருக்கனுர்கிழமை" என்று தொடங்கி எழுதியுள்ள பாட்டு சோதிடகிரக சிந்தாமணி என்ற நூலின்கண் உள்ளதேயாகும். இது

அருக்கனுர் கிழமை யாதி சென்றவக் கிழமை யாய்ந்து
பெருக்கிமூன் றதனின் பேற்றை மாமுதற் கழித்துப் பின்னை
இருக்குநா ளொன்பா னோர்கண் பன்னிரண் டிருகண் காணுந்
தருக்கிலாப் பின்னு ளாறுங் குருட்டுநாட் சந்தி ரற்கே.

என்றுள்ளது. இங்குள்ள பிழைபட்டபாட்டினை இதுகொண்டு திருத்துக. இதற்குப் பின்பு ஒரு வெண்பா எழுதப்பட்டுள்ளது. அது சீர்வரையறையின்றி யுள்ளது.

### கிருக திருஷ்டி சொல்லுகிருர்

46. புந்தி விசா(யா)மும் புகர் காணிருகண்
யிந்த வருகனிவை காணஒரு கண்
சேந்தழல் மைந்தன் சேமுண்ணி மூன்று
அந்தகன் கண்ணென அரிந்து

என்பது: புதனும், பிருகஸ்பதி சுக்கிரனும் யிருகண் கிரகம். சந்திரனும் சூரியனும் ஒருகண் கிரகம். செவ்வாயுஞ் சனி ராகு கேதுவும் குருட்டு கிரக மென்றறியவும்.

கிரக திருஷ்டி முற்றும்.

கிழமை ஏழுக்கு திஷ்டி சனி யிதுவே சரி.

### இப்பால் பக்க திஷ்டி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அசுபதி | 1 | மகம் | 10 | மூலம் | 19 |
| பரணி | 2 | பூரம் | 11 | பூராடம் | 20 |
| கார்திகை | 3 | உத்திரம் | 12 | உத்திராடம் | 21 |
| ரோகணி | 4 | அத்தம் | 13 | திருவோணம் | 22 |
| மிருகசிறீஷம் | 5 | சித்திரை | 14 | அவிட்டம் | 23 |
| திருவாதிரை | 6 | ஸ்வாதி | 15 | சதயம் | 24 |
| புனர்பூசம் | 7 | விசாகம் | 16 | பூரட்டாதி | 25 |
| பூசம் | 8 | அனுஷம் | 17 | உத்திரட்டாதி | 26 |
| ஆயிலியம் | 9 | கேட்டை | 18 | ரேவதி | 27 |

ஆக நக்ஷத்திரம் 27.

---

45. பருதி முதலாகப் பாங்காமுங் தித்துக்
குதிரை முதனளாக் கழித்தே—எதிராகும்
ஒன்பது மொற்றைக்கண் ணீராறிரட்டைக்கண்
நின்றனவே மூங் குருடென்னீ. என்பது திருத்தம் ஆகலாம்.

கிரகதிருஷ்டி-இது குறிக்கும் பாட்டுத் திருத்தம் வருமாறு.

46. புந்தி வியாழம் புகர்கா ணிருகண்
ணிந்து வருக்க னிவைகா ணொருகண்
செந்தழல் மந்தன் சேர்நிழன்மூன்றும்
அந்தகன் கண்ணெஞ் றறிந்து கொள்ளே.

இனிப் பின்புவரும் பகுதிகளெல்லாம் சோதிட கிரகசிந்தாமணி என்னும் வருஷாதி நூலிலுள்ளவைகள் அவ்வாறே இங்கு எழுதிச் சேர்க்கப்பட்டன என அறிக. 36-ம் பக்கத்தில் மேற்காட்டிய பாடல்கள் இரண்டும் மீட்டும் எழுதப்பட்டுள்ளது அல்லாமல் "சந்தித்த பின் பக்கத்து" என்ற அந்நூற்பாட்டு ஒன்றும்கூட எழுதப்படடுள்ளது. இவை இங்கு வருதற்கு இயைபு பற்றி ஏடு எழுதினோர் கருத்து அறிந்து கொள்ளுக.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சித்திரை | 1 | ஆவணி | 5 | மார்கழி | 9 | | |
| வைகாசி | 2 | புரட்டாசி | 6 | தை | 10 | | |
| ஆனி | 3 | ஐப்பசி | 7 | மாசி | 11 | | |
| ஆடி | 4 | கார்திகை | 8 | பங்குனி | 12 | | |

ஆக மாதம் 12.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மேஷம் | 1 | கற்கடகம் | 4 | துலாம் | 7 | மகரம் | 10 |
| ரிஷபம் | 2 | சிங்கம் | 5 | விருச்சிகம் | 8 | கும்பம் | 11 |
| மிதுனம் | 3 | கன்னி | 6 | தனுசு | 9 | மீனம் | 12 |

ஆக ராசி 12.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மேஷம் | $4\frac{1}{4}$ | கற்கடகம் | $5\frac{1}{2}$ | துலாம் | 5 | மகரம் | $5\frac{1}{4}$ |
| ரிஷபம் | $4\frac{3}{4}$ | சிங்கம் | $5\frac{1}{4}$ | விருச்சிகம் | $5\frac{1}{4}$ | கும்பம் | $4\frac{3}{4}$ |
| மீதுனம் | $5\frac{1}{4}$ | கன்னி | 5 | தனுசு | $5\frac{1}{2}$ | மீனம் | $4\frac{1}{4}$ |

ஆக ராசி பன்னிரண்டுக்கு நாழிகை அறுபது.

மாதத்தை............ஆல்............முப்பது நாள். இந்த முப்பதும் $4\frac{1}{4}$-ஆல் பெருக்கி கொடுத்தது போகக் கண்ட யீவு ஒரு நாழிகைக்கு $7\frac{1}{4}$ இந்தப்படி மாததையிலநாள் சென்றதது....ஆல் நாழிகை தள்ளி மத்த நாழிகை.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பிரதமை | 1 | சதுர்த்தி | 4 | ஸப்தமி | 7 | தசமி | 10 | திரயோதசி | 13 |
| துதியை | 2 | பஞ்சமி | 5 | அஷ்டமி | 8 | ஏகாதசி | 11 | சதுர்தசி | 14 |
| திருதிகை | 3 | சஷ்டி | 6 | நவமி | 9 | துவாதசி | 12 | அமாவாசை | 15 |

ஆக திதி 15 முற்றும்.

| | | | | |
|---|---|---|---|---|
| பிரதமை | துதியை | திருதிகை | நவமி | பஞ்சமிதிதி |
| சஷ்டி | சத்தமி | அஷ்டமி | சதுர்த்தி | தசமி |
| ஏகாதசி | துவாதசி | திரியோதசி | சவுத்தி | அமாவாசை |
| நந்தை | பத்திரை | சேயை | மிருத்தை | பூரணை |

ஆக வகை 5-க்கு திதி 15.

| **சரராசி விபரம்** | **திரராசி விபரம்** |
|---|---|
| மேஷம் | ரிஷபம் |
| கடகம் | விருச்சிகம் |
| துலாம் | கும்பம் |
| மகரம் | சிங்கம் |
| ஆக (4) | ஆக (4) |

## உபய ராசி விவரம்

| | | |
|---|---|---|
| தனுசு | மிதுனம் | ஆக 4-க்கு |
| கன்னி | மீனம் | ஆக 3-க்கு ராசி 12. |

மேதகு கதிரோள் நின்ற ளுறும்
மற்றதன் மேழில் மூன்றும்
கோதறு பின்னில் மூன்றும்
குருட்டுநா ளென்று கொள்க
ஓதியவற்கு தன்னு லெதிரமுது
கொருகண் காணும்.

என்பது: ஆதித்த நின்ற நாளும் அதற்குமுன் மூன்றுநாளும் பின் மூன்று நாளும் திருட்டில்லே. முன்னுலுக்கும் பின்னுலுக்கும் ஒரு திருட்டி மாரனுக்கெல்லாம் ரெண்டு திருட்டையும் உண்டுயென்று அறியவும்.

அருக்கனுர் கிழமை யாதி
சென்ற வக்கிழமை பாத்து
பெருக்கி மூன்றதனுர் பெத்த
மாமுதல் கழித்துப் பின்னே
இருக்குநா ளென்பாண்
ஒருகண் பன்னிரெண்டு
இருகண் காணும், தருக்கிலா பின்னிவா
அங்குருட்டு நாள் சந்திரர்க்கே.

என்பது: ஞாயிற்றுக்கிழமை முதல் சென்ற கிழமையை யெண்ணி மூன்றில்ப் பெருக்கி அத்துகையை அசுபதி தொட்டெண்ணிக் கழித்து நின்ற நாளொன்பதும் ஒரு திருட்டி அ(த)ற்கப்பால் பனிரெண்டும் ரெண்டு திருட்டி. அதுக்கப்பால் ஆறுநாளும் திருட்டி யில்லே யென் றறியவும்.

சந்தித்த பிறபக்கத்துத் திசமி
அவிட்டத்தின் பின்னேந்து
முந்துத்த வாதினுங்குங் குருடுமின்
பொருமூன் றோர்கண்
பிந்துற்ற வாறுங்காணும் பின்னு
மூனறோர் கண்காணும்
சிந்திக்கி லெல்லாங் காணும்
திதிய மூன்றோர்கண் காணே.

என்பது: அமரபக்கத்து ஏகாதசிமுதல் அஞ்(ஐந்)தும் பூர்வபக்கத்துப் பிரதமை முதல்நாளும் ஆக ஒன்பதுநாளும் திருட்டில்லே. பூர்வபக்கத்

துப் பஞ்சமிமுதல் சத்தமி மூன்றுநாளும் ஒரு திருட்டி அப்பால் அஷ்டமிமுதல் திரயோதசி ஆறுநாளும் ரெண்டு திருட்டி அப்பால் சதுர்தசி பூரணமும் அமரபக்ஷத்துப் பிரதமையும் ஒரு திருட்டி அப்பால் துதிகைமுதல் ஆறுநாளும் சப்தமி பர்யந்தம் ரெண்டு திருட்டியும் காணும் அப்பால் அஷ்டமிமுதல் மூன்றுநாளும் தசமி பர்யந்தம் ஒரு திருஷ்டி. இப்பிடி பிறப பத்தும், வோரை வருமாறு ஞாயிறுமுதல் சனீரூக ஏழு வாரத்திலும் வியாழமுதற் புதனீரூக வெழுமடவே சிறுகாலே வந்து ரெண்டரை நாழிகை யுண்ணும். இப்படி இரண்டாவது முதலுண்டபடி யென்றறியவும்.

அசுபதியும் பரணியும் கார்த்திகைக் காலும் மேஷம் கார்த்திகை முக்காலும், ரோகணியும் மிருகசீருஷத்து முன்னரையும் ரிஷபம் மிருகசீருஷத்துப் பின்னரையும் திருவாதிரையும் பூசத்துக் காலும் பூசமும் ஆயிலியமும் கடகம் மகமும் பூரமும் உத்திரத்துக் காலும் சிங்கம் உத்திரத்து முக்காலும் அஸ்தமுஞ் சித்திரையும் முன்னரையுங் கன்னி சித்திரை பின்னரையும் சோதி விசாகத்து முக்காலும் துலாம் விசாகத்துக்காலும் அனுஷங்கேட்டையும் விருச்சிகம் மூலம் பூராடம் உத்திராடத்துக்கால் தனுசு உத்திராடத்து முக்காலும் திருவோணம் அவிட்டம் முன்னரையும் மகரம்.

அவிட்டத்துப் பின்னரையும் சதயம் பூரட்டாதி முக்காலும் கும்பம் பூரட்டாதிக் காலும் உத்திரட்டாதியும் ரேவதியும் மீனம் ஒரு ராசிக் கடைத்த நக்ஷத்திரம் இரண்டேகாலுக்குக் கால் ஒன்பது இந்த ஒன்பதுக்கும் சூரியனிருக்கு ளுள், ஒரு காலுக்கு நாள் மூணும் நாழிகை யிருபது. இந்தப்படி மாத்தையில்ச் சென்ற நாளும் நாழிகையுந் தள்ளி பாத்துக்கொண்டு அந்த நக்ஷத்திரத்துக்கு முன் மூன்றும் பின் மூன்றும் குறுடு. அதுக்கு பின்னுலு முன்னுலு ஒரு கண். அதுக்கப்பால் ரெண்டு கண்ணுள்ள நக்ஷத்திரம்.

## யினி ஓரை வருவது அறியவும்

ஒரு நாள் ஒன்றுக்கு நாழிகை அறுபதுக்கும் இருபத்தாறு ஓரையும் நாழிகை ஒன்னரையும்.

## யாதொரு கப்பலுக்கு பாய்மரம் அளவு

ஒரு கப்பலுக்கு எரா நீளம் முழம் 45. அகலம் முழம் 15. அந்த கப்பலுக்கு வலிய பாய்மரம் ஒடுதை $2\frac{1}{2}$ கொள்ளவும். ஒடுதை உறைக்கு முழம் 37. வலிய காவிய நீளம் ஒடுதைகளுக்கு முழம் $22\frac{3}{4}$. ஆக வலிய பருமல் ஒடுதை 2-க்கு முழம் 30. வலிய காவிப் பருமல் ஒடுதை $\frac{1}{8}$-க்கு முழம் 17. இனித்திருக்கத்தியாய் மரம் ஒடுதை $2\frac{1}{4}$-க்கு முழம் $33\frac{3}{4}$. திருக்கைத்தி காவிய பருமல் ஒடுதை $\frac{7}{8}$-க்கு முழம் 15. ஈசானய

பாய்மரம் ஒடுதை, $1\frac{1}{8}$-க்கு முழும் $22\frac{3}{4}$. கோணப்பருமல் சபதாலியா ஒடுதை $1\frac{3}{4}$-க்கு மீசானுக்காவிய நீளம் ஒடுதை $\frac{3}{4}$-க்கு முழும் $11\frac{1}{4}$. வட்டப்பருமல் நீளம் ஒடுதை 1-க்கு முழும் 15. மீசுரனுக காவியப் பருமல் நீளம் ஒடுதை $\frac{7}{8}$-க்கு சவுதிலிப் பாய்மரம் ஒடுதை $2\frac{1}{4}$. சவுதிரிப் பருமல் ஒடுதை $1\frac{1}{8}$. இந்தப்படி ஒடுதை கண்டரியவும்.

2 1/16 வகை காணத்து வலிய பாய்மரம் எரா மய்யம் திருகத்தி எராத்தலே மீசானு வலிய பாய்மரத்துக்கு எரா பாத்துக்கொள்ளவும்.

## நங்கூரம் வகை

யாதொரு கப்பலுக்கு நங்கூரம் வைக்கும் வகை எரா நீள மதைச் சரியடியாக்கி அடி 1-க்கு ராத்தல் 26 பெரிய நங்கூரம்.

இரண்டாவது : நங்கூரம் தச்சு அடி 1-க்கு ராத்தல்........
மூன்ருவது தச்சு அடி 1-க்கு ராத்தல் 12.
நாலாவது : நங்கூரம் தச்சு அடி 1-க்கு ராத்தல் 8.
இந்தப்படி பார்த்துச் செய்யவும்.

| | |
|---|---|
| எரா நீளம் அடி | $66\frac{1}{4}$ |
| அணியத்து ரோதை நீளம் அடி | 35 |
| இதுக்கு விழுக்காடு அடி | 13 |
| அமரத்து ரோதை நீளம் அடி | 24 |
| இதுக்கு விழுக்காடு அடி | 2 |
| இதுக்கு தலுக்கு காசு உசத்தி அடி | $11\frac{1}{8}$ |
| அடி அகலம் அடி | 23 |
| அடி உசத்தி அடி | $11\frac{1}{8}$ |
| மைய்யப் படத்தின் வாரநீக்கம் அடி | 27 |
| தட்டுச்சிந்தை மேல்வாய் மட்டம் எராக்கணக்கு மேலேஉசத்தி அடி | $13\frac{1}{8}$ |

இதுக்கு கீழே அலுக்காசு ஒரு அடி போகக் கீழ் சிந்தை அலுக்காசு.

## இங்கிலீசு(ஷ்) கப்பல் அளவு

### கோலுக்கு மூனு அடி

| | |
|---|---|
| எரா நீளம் | 18 |
| எரா கனம் விரல் | 4 |
| எரா இடம் விரல் | 5 |
| அணியத் துரோதை அடி | $5\frac{1}{8}$ |
| இதுக்கு விழுக்காடு அடி | $2\frac{1}{8}$ |
| அமரத் துரோதை அடி | $4\frac{1}{4}$ |
| இதுக்கு விழுக்காடு அடி | 1 |
| அட்டி யிடம் அடி | 4 |

| | |
|---|---|
| அட்டி தலுக்காசுக்கு மேலே அடி | $1\frac{1}{4}$ |
| மூனும் பாதத்தில் தலுக்காதுகடை உசத்தி அடி | $\frac{1}{8}$ |
| இதுக்கு மய்ய மட்டத்தின் வாரிநீக்கம் அடி | $5\frac{3}{4}$ |
| இதுக்கு சிந்தை உசத்தி அடி | 2 |
| விரல் | 4 |
| இதுக்கு மேலே படி உசத்தி விரல் | 7 |
| இதுக்கு மணி தூக்கம் கோடி நூலில் அடி | 1 |
| இதுக்கு மேல் நூலில் விரல் | $1\frac{1}{8}$ |
| இதுக்கு மேல் கொடி நூலுக்கு கீழே அடி | $\frac{1}{8}$ |
| இதுக்கு கீழே விரல் | 3 |
| இதுக்கு கீழ் மய்யத்திலிருந்து முன்னேழு போக இரண்டாவது மட்டம் வரிநீக்கம் அடி | $5\frac{1}{8}$ |
| விரல் | 2 |
| இதுக்கு சிந்தை உசத்தி அடி | 2 |
| விரல் | 4 |
| இதுக்கு உசத்தி விரல் | 7 |
| இதுக்கு மணிதூக்கம் விரல் | 13 |
| இதுக்கு மேலே | $1\frac{3}{4}$ |
| இதுக்கு மேலாக கோடி நூலுக்கு கீழே விரல் | $6\frac{1}{8}$ |
| இதுக்கு மேலாகக் கீழ் நூலில் விரல் | $3\frac{1}{4}$ |
| இதுக்கு கீழாக அணியத்துக்குச்சை வாரி நீக்கமடி | 5 |
| இதுக்குக் கறலகனம் விரல் | 3 |
| இதுக்கு மேலே சிந்தை உச்சி அடி | 2 |
| விரல் | 3 |
| இதுக்கு மேலே படி உசத்தி விரல் | 7 |
| இதுக்கு மணி தூக்கம் விரல் | 15 |
| இதுக்கு மேலே் விரல் | 4 |
| இதுக்கு மேலாக்க கோடி நூலுக்கீழே விரல் | 9 |
| இதுக்கு கீழ் நூலில் வில் | 5 |
| இதுக்கு கீழணயத் துரோதையிட சிந்தை உசத்திராக்கணங்கூட அடி | $3\frac{1}{8}$ |
| மையத்திலிருந்து பிறகே போரெண்டாவது மட்டம் வாரி நீக்கம் அடி | $5\frac{1}{8}$ |
| விரல் | 9 |
| இதுக்கு சிந்தை உசத்தி அடி | 2 |
| விரல் | 5 |
| இதுக்குப்படி உசத்தி விரல் | 7 |
| இதுக்கு மணிதூக்கம் விரல் | $22\frac{1}{8}$ |
| இதுக்கு மேல்நூலில் விரல் | $10\frac{1}{8}$ |

| | |
|---|---|
| இதுக்கு மேலாக கொடிநாலுக்குக் கீழே விரல் | 6 |
| இது நூலில் விரல் | 3 |
| இதுக்குக் கீழாக மூணுவது மட்டம் வாரி நீக்கமடி | 5 |
| இதுக்குச் சிந்தை உசத்தி கட்டை மேலே அடி | $2\frac{1}{4}$ |
| இதுக்குப் படி உசத்தி விரல் | 7 |
| இதுக்கு மணிதூக்கம் விரல் | 15 |
| இதுக்கு மேலே விரல் | 4 |
| இதுக்கு மேலாக கோடி நாலுக்குக் கீழே விரல் | $8\frac{1}{8}$ |
| இதுக்குக் கீழே நூலில் விரல் | 4 |
| இதுக்குக் கீழாக அட்டியிடமடி | 4 |
| அட்டி உயர்த்தி அடி யிதற்குத் தூக்கம் விரல் | 19 |
| இதுக்கு மேல் நூலின் விரல் | $1\frac{1}{4}$ |
| இதுக்கு மேலாகக் கொடிநாலுக்குக் கீழே விரல் | 5 |
| இதுக்குக் கீழே விரல் | $2\frac{1}{8}$ |
| இதுக்குக் கீழாக அட்டிச்சிந்தை உசத்தி அடி | 3 |
| விரல் | 4 |
| இதுக்குப் பாய்மரம் அடி | 22 |
| இதுக்குள்ளே கலியத்து அடி | 3 |
| இதுக்குப் பருமல் அடி | 16 |
| இதுக்கு மேல் பருமல் அடி | 2 |
| இசுக்காள யிடம் அடி | $1\frac{1}{4}$ |
| இதுக்குத் தன்றுக்கை | $17\frac{1}{8}$ |
| இது வத்தவாக பொருந்து மெழுத்தும் எரா நீளம் அடி | 20 |
| அணியத்துரோதை நீளம் அடி | 5 |
| விழுக்காடு அடி | 2 |
| அமரத்துரோதை நீளம் அடி | 4 |
| அட்டியிடம் அடி | 3 |
| அட்டி உசத்தி அடி | 2 |
| அணியத்துக்குச்சைமட்டம் அடி | $4\frac{3}{4}$ |
| இரண்டாவது மட்டம் அடி | 5 |
| மூன்றுவது மட்டம் அடி | 5 |
| விரல் | 2 |
| நாலாவது மட்டம் அடி | 5 |
| ஐந்தாவது மட்டம் அடி | 4 |
| விரல் | 2 |
| அணியத்துக் கச்சைவாரி நீக்கம் அடி | 6 |
| தட்டு உசத்தி அடி | $2\frac{3}{4}$ |
| அணியத்துக்குக் கீழே தலுக்காது கட்டைஉசத்தி விரல் | 8 |
| அணியத்திலிருந்து பிறகே போக வாரிநீக்கம் அடி | $6\frac{1}{2}$ |

| | |
|---|---|
| உசத்தி அடி | $3\frac{1}{8}$ |
| மய்யமட்டம் வாரிநீக்கம் அடி | $6\frac{1}{2}$ |
| மையத்திலிருந்து பிறகே போக வாரிநீக்கமடி | $6\frac{1}{4}$ |
| தட்டு உசத்தி அடி | $3\frac{1}{4}$ |
| அடிக்கி அடுத்த மட்டம் வாரிநீக்கம் அடி | 5 |
| விரல் | 5 |
| அதுக்குத் தட்டு உசத்தி அடி | $3\frac{1}{8}$ |
| அடி உசத்தி அடி | $2\frac{1}{8}$ |
| அட்டியிடம் அடி | $4\frac{7}{8}$ |
| எரா நீளம் அடி | $18\frac{3}{4}$ |
| அணியத்துரோதை நீளம் அடி | 8 |
| அணியத்துரோதை விழுக்காடு அடி | $3\frac{3}{4}$ |
| கொடி நூலில் சிந்தை உசத்தி அடி | $4\frac{3}{4}$ |
| விரல் | $\frac{3}{4}$ |
| அதற்குமேலே கண்ட நீளம் அடி | $1\frac{3}{4}$ |
| அமரத்துரோதை நீளம் அடி | $5\frac{1}{4}$ |
| தலுக்காது உயர்த்தி அடி | 2 |
| விரல் | 5 |
| அணியத்துரோதை விழுக்காடு அடி | $3\frac{3}{4}$ |
| எரா நீளம் அடி | 21 |
| அணியத்துரோதை நீளம் அடி | $5\frac{3}{4}$ |
| இதுக்கு விழுக்காடு அடி | $2\frac{1}{4}$ |
| அணியத்துக் குச்சைமட்டம் வாரிநீக்கம் அடி | 4 |
| விரல் | 7 |
| பிறகே போக இரண்டாவது மட்டம் வாரிநீக்கம் அடி | 5 |
| விரல் | 2 |
| மூனுவது மட்டம் வாரிநீக்கம் அடி | 5 |
| விரல் | 5 |
| நாலாவது மட்டம் வாரிநீக்கம் அடி | 5 |
| விரல் | 3 |
| அஞ்சாவது மட்டம் வாரிநீக்கம் அடி | 4 |
| விரல் | 8 |
| எராக்கனம் விரல் | 6 |
| இதுக்குத் தலுக்காது உசத்தி அடி | 2 |
| அடி உசத்தி அடி | 2 |
| இதுக்கு மேல்கண்ட அடி உசத்தி விரல் | 9 |
| அமரத்துரோதை விழுக்காடு விரல் | 8 |
| அணியத்துக் குச்சையிலகுருள் உசத்தி விரல் | 3 |
| ரோதையிற் சிந்தை உசத்தி எராப்பிறவாக்கானுகூட அடி | 4 |

# சிற்ப சாஸ்திரம்

வேதங்களாகி விளங்கும் மும்மூர்த்தியாகி
போதகம் விளங்கவந்த புண்ணியநாள்கள் போற்றி
தீதிலார் மயனர்சொன்ன சிற்பசாஸ்த்திர நூலை
நீதியாய்த் தனலே நெறிபட விளம்பலுத்தாம்

என்பது: வேதமுமாகி அங்கமுமாகி விளங்கும் மும்மூர்த்தியை அடியிணை தொழுது போற்றி அஞ்சு(ஐந்)து முகமாகிய பரமேஸ்வரன் நெத்திக்கண்ணிற் சென்றிய ஆதிவிசிய (விஸ்வ) கர்மன் அருளினலே வந்து தித்தம்பயனகை விசுவன் வட்டச்சிபானென்று அஞ்சு பெரிய மயனர் சொன்ன சிற்ப சாஸ்திர நூலை வடமொழியைத் தமித்தினலே நெறியுண்டாகச் சொல்லுவெநென்றவாறு.

1. சிற்பனக்கினி உண்ட(ா)னவழி செல்லும்போது
காணுமே காமரூபியாய் நிற்குபொனனய
வாணிலிய முகமுஞ் செய்தாய் நினவுடன்
சிந்தையாலே நேசமாய் நடக்குநன்றே.

என்பது: மனைக்கால் வேணுமென்று வந்தழைத்த யிசைமானும் சிற்பனும் கூட போம்பொழுது காமரூபியாய் அழகுபெத்து இருக்கிற ஸ்திரீயை எதிரே கண்டால் மெத்தநல்லது. லெக்ஷ்மீ கடாக்ஷமுண்டாம். சருவசம்பத்து முண்டாய் வாழ்ந்திருப்பார்களென்றவாறு.

2. வலமிகச் செல்லும் பல்லி வாலிபயிடமுஞ் சொல்லில்
பலமிக உயர ஞகும் பாங்குடைக் கருமம் நன்ரும்
குலமிகத் தலமும் நன்ரும் கொக்குறு காகம் நன்ரு........

என்பது: தலத்திலே சிற்பனும் எசமானும் சென்று நின்ருல், வெள்ளைப்போர்வைக் கண்டாலும் ரிஷபத்தை கண்டாலும் பசுவைக் கண்டாலும் மானைக் கண்டாலும் ஞரவைக் கண்டாலும் மெத்த நல்லது. மனையெடுக்க நன்று. வாழ்வும் சம்பத்துமுண்டாம்.

---

1. "சிற்பனக்கினி" என்று தொடங்கும் தொடர் ஒரு பாட்டாகும், விருத்த யாப்புடையது பல சொற்களும் தொடையும் சிதைந்துள்ளன. அதன் உரை காண்க:

2. "வலமிகச் சொல்லும் பல்லி" என்று தொடங்கும் பகுதி ஒரு பாட்டாகும். இதன் முதலடியிற் பகுதி உரைக்கு இயைய "வாலுடை யிடபங்காணில்" என்றிருத்தல் வேண்டும். இப்பாடலின் இறுதியடி சுவடியில் இல்லை.

3. எரும்புதா னொழுகுவிட்டு போயிடித்தியை கண்டால்
சேர்ந்திடு கரையானொத்தி சோவுபீடிலது கருதவேண்டாம்
சுரும்புதா னின்றுயர்ந்து தான்டிடவேண்டாம் வேண்டாம்
கரும்புபோல் மொழியினாலே காட்டினன் காக்ஷிதானே.

என்பது:—சிற்பனும் 74 மானுமனைகோலப் பாக்கிற தலத்திலே எறும்பு ஒழுக்குவிட்டு போகவும் கரையானொந்தி சிலும்பிலும், வண்டு கீழ் பறக்கிலும் அந்த தலத்திலே மனைகோலலாகாது. நோவும் பிணியும் உயிர்சேதமும் உண்டு.

4. பாங்குடன் பரண்டையார்தம் பன்னொடுவலத்தில்ப் பாடிப்
பாங்குடனிடத்தில் போக தெயணியதால் வழியுமாகில்
ஓங்கிய மனையும் நன்றாம் ஒள்ளியப்பயனுமுண்டாம்
நீங்குதான்வருவதில்லை செப்பியவண்ணன் தானே

சிற்பனும் எசமானனுமாக தலம் பார்க்குமிடத்தில் பாண்டை என்கிற கருங்குருவியிடத்திலே அணிகுரல் வழிவுமாகில் எடுத்த கருமம் நன்றாம், மனைகோலினால் வாழ்வு சம்பத்துண்டாம்.

5. அருக்கனுஞ் சோமன் மேலு
மண்டினால் மிகவே தாழ்ந்து
திருத்திய மேற்கும் தெற்கும்
சிறனாது பூமிமேலே
வருத்தமில் வாழ்வாரெண்டு
மனைதனை யெடுத்துக் கொள்ளும்
கருத்துடை புலவோர்க்கெல்லாம்
காரணம் விளம்பலுற்றாம்.

அருக்கனென்று கிழக்குச்சோமனென்று வடக்கு ஆகையாலே கிழக்கும் வடக்கும் வடக்குந் தாழ்ந்து மேற்குந் தெற்கும் உயர்ந்து யிருபத்தொரு பூமியில் குணமறிந்து மனைகோலினால்த் துலையில்லை சுகத்தைக் கொடுக்கும்.

---

3. "எரும்புதான்" என்று தொடங்கும் பாட்டும் பிழையாக உள்ளது.
எறும்புதா னொழுங்கு விட்டுப் போயிடு மிடத்தைக் கண்டால்
செறிந்திடு கரையா னொந்தி சேர்விடம் கருத வேண்டாம்
சுரும்புதா னின்று யர்ந்து தாழ்ந்திடின் வேண்டாம் வேண்டாம்
கரும்புபோன் மொழியி னாளே காட்டினன் காட்சி தானே,
என்று திருத்தம் காணலாம்.

4. "பாங்குடன்"—என்பது பாட்டு. திருத்தம் வருமாறு:
பாங்குடன் பகண்டை யார் தம்பண்ணொடு வலத்திற் பாடிப்
யாங்குயுனிடத்திற் போகி யணிகுரல் வழியுமாகில்
ஓங்கிய மனையும் நன்றா மொள்ளிய பயனு முண்டாம்
நீங்குதான் வருவ தில்லை செப்பிய வண்ணந் தானே.

6. அந்நணர் தென்திசை அரசர் மேல்திசை
வந்திடு வணிகாக வடதிசை யாகுமே
கொந்தமிழ் கீழ்திசை சூத்திரற் காரும்
தந்திடு நடுவறு பிறமஙலத் தானமே.

மனைகோல ஊருக்கு திசை பார்க்கும்படி பிரும்ம க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் னுலு சாதகருத்தும் பிராம்மணருக்கு தெற்கு திசையும் சூத்திரர்குக் கிழக்கு திசையும் அரசருக்கு மேல்திசையும் வணிகருக்கு வடதிசையும் இந்தப்படி மனைகோலினுல் குடியிருக்க நன்ரும். நடுவே பிரம்மஸ்தானமும் விடுவது அம்பலமுமாம்.

7. இனிதாகியமை வின்சுவைமண் மறையோன்
மனதாகிய கறபது மன்னவர்க்காம்
இனிதாகியதெ புரியானதுமண் வசியன்
சொன்னதாகிய கைத்தமண் சூத்திருக்கு

மனைகோல வேணுமென்று குறித்த தலத்தில் மண்ணைத் தின்றுபார்த்தால் தித்திப்பாயிருந்த மண் மறையோருக்கு; துவப்பாயிருந்த மண் மன்னவருக்கு; புளித்திருந்த மண் வைசியருக்கு; கசத்திருந்த மண் சூத்திரர்க்குமாகும்.

---

"அருக்கனுஞ் சோமன்" என்பது பாட்டு. அதன் திருத்தம் வருமாறு :

அருக்கனுஞ் சோமன் மேலு மண்டினுல் மிகவே தாழ்ந்து
திருத்திய மேற்குத் தெற்குஞ் சிறந்திடு பூமி மேலே
வருத்தமில்வாழ்வா ரென்று மனைதனை யெடுத்துக் கொள்ளும்
கருத்துடைப் புலவோர்க் கெல்லாங் காரணம் விளம்ப லுற்ரும்.

6. "அந்தணர்"—இந்தப் பாட்டும் திருந்த வேண்டும். அது வருமாறு :

அந்தணர் தென்றிசை அரசர் மேற்றிசை
வந்திடு வணிகர்க்கு வடதிசை யாகுமே
சொந்தமாக் கீழ்த்திசை சூத்திரர்க் காகுமாம்
தந்திடு நடுவினிற் பிரமத் தானமே.

7. "இனிதாகிய"—இப்பாட்டும் திருந்தற்குரியது. இதன் திருத்தம் வருமாறு :

### வஞ்சிச்சந்த விருத்தம்

இனிதாகிய வின்சுவை மண்மறையோன்
மனதாய துவர்ப்பது மன்னவர்க்காம்
வனிதா!புளி யானமண் வைசியர்க்காம்
துனியாகிய கைத்தமண் சூத்திரர்க்கே.

8. திடமாகிய சென சாரமனை சேர்மறையோன்
குடசாரெனு மேல்சார்மனை சேர்வரசன்
வடசாரெனுமனை யாளுது மாவணி கன்
துடசாரமனை கீழ்சாரமனை சூத்திரர்க்கே

எது :—தென்சாரமனையும் வடக்கு வாசலுமாகில் மறையோர்க்கு மேல் சார்மனையும் கிழக்கு வாசலும் மன்னவர்க்கு வடசார்மனையும் தெற்கு வாசலும் வணிகற்கு கீழ்சார்மனையும் மேற்கு வாசலும் சூத்திரர்க்கு நாலுசாதிக்குஞ் சொல்லுவது கனதுலவாடுமதி

9. நீவிலனுயனவை மைதன கிளையில்
மூத்தவர் தனக்கும் மனையிதானதே
திசையிலமேல் திசையிருப்பூறி விருக்கும்
பொன்குல மெளயவர் பூதலமர்க்கே

அவனவன் குடியிருப்புக்குத் திசை பாத்துச் சொல்லுவது. தனக். குயர்ந்த குலத்தோர்க்கும் மறையோர்க்கும் தவசிகளுக்கும் குருக்களுக் கும் தன் ஆண்டவனுக்கும் மாதா பிதாவுக்கும் மாமனுக்கும் தமைய னுக்கும் வயதுக்கும் மேற்கே யிருக்கலாகாது. துக்கங்காட்டும் அவர் களை தெற்கு மேற்கு வைத்து தான் வடக்கு கிழக்குமாக யிருந்தால் சுகத்தைக் கொடுக்கும் என்பது.

10. தெக்குவிடு குப்பை திகழ் நிருதி
யிடுவைக்கோலில் வடதிசைக்கு எருமைத் தொழுகம்
எய்து மவர்கொள் வடமேற்கும் விட்டுனவும்
கட்டுபூசற் கடலடக்கத்துப் பசுத்தொழுவம் பத்தே.

---

8. "திடமாகிய"—என்ற பாட்டும் திருத்தற்குரியது. திருந்திய பாடம் வருமாறு

திடமாகிய தென்சார்மனை சேர்மறையோன்
குடசாரெனு மேல்சார்மனை கோலரசன்
வடசாரெனு மனையானது மாவணிகன்
தொடர்சாரமர் கீழ்சார்மனை சூத்திரர்க்கே.

நாலு சாதிக்குஞ் சொல்லுவது : இதன்கீழ் இரண்டு வரிகளிலுள்ளவை ஒரு பாட்டாகும். அடிவரையறை காண இயலாதபடி பிழை நிரம்பியுள்ளது.

10. "தெக்கு" என்று தொடங்கிய நான்கு வரிகளும் ஒரு பாட்டாகும். அடிவரையறை செய்யக்கூடாதபடி பிழைபட்டுள்ளது. உரையும் பொருந்தவில்லை. "தெற்குவிடுகுப்பை" என்று பாட்டிலுள்ளது : உரையில் தெற்குத்திசை குறிப்பிட வில்லை. நிருதி திசை வைக்கோல் போடக் கூறி வடதிசைக்கு எருமைத் தொழுவம்' சொல்லியுள்ளது, உரையில் மேற்கு எருமை கட்டவும் என்றுள்ளது பொருந்தவில்லை. பின்னிரண்டடிகளும் சொற்பிழை கள் உள்ளன.

வளவு கட்டளைச் சொல்லுவது:

தான் குடியிருக்கிற வளவுக்குக் குப்பை போடவும். தென்மேற்கு மூலையில் வைக்கலைப் போடவும். மேற்கே எருமை கட்டவும். வடமேற்கு மூலை களஞ்சியும் வடக்கே பசுத்தொழுவம் கட்டுவது, இப்படிச் செய்தால் உத்தமம்.

11 இயத்துவட கீழ்த்திசை யிடுக்களையே வைப்போம்
வைத்தரு கிழக்கதனில் ஞடுக்களைய வைப்போம்
செய்தரிய வங்கிதனில் வைக்குமது சொன்னமம்
பிறபற மொழிந்தபடி பார்த்திடுதல் நன்றே.

என்பது: யிருக்கிற வளவுக்கு வடிகீழ் மூலையிலே அடுக்களை விடுவது. புதையல் வைப்பது. இப்படியிருந்தால் யிடிறு வராது. தென்கீழ் மூலை துக்கமென்றும் வராது.

12. நன்மனை யெடுப்போர்க்கெல்லாம் நக்குடன் ராசிதள்ளி
முன்வலங் கொள்வராகில் முயன்றண கருமம்நன்ரும்
பன்னெடுங் காலம்வாழ்வாரயை பின்றன மக்கட்பேறும்
மின்னிடை கொள்வாராகில் பிணிவொடு படுவர்தாமே.

என்பது: மனையுடையவன் பேற்வழி ராசி பார்க்குதல் பிறந்த நாளில் ராசி பார்க்குதல் குந்த ராசி பார்த்து அவன் மனைக்கு முன்ருக நிக்க வாசல்விட நன்று. பின்னுகுதல் யிடமாகுதல் நிக்க. வாசல் விட்டாலாகாது. தான் இப்படியறிந்து வாசல் விடவும்.

---

11. "இயத்து" என்ற தொடங்குவதும் பாட்டு. பிழைபட்டுளது. உரையும் பொருளில் குறைபட்டுள்ளது.

12. "நன்மனை"—இப்பாட்டும் பிழைபட்டுளது. கருத்துத் தெளிவாயில்லை. இதற்குப் பின்புள்ள பாடலின் திருத்தம்.

அறுசீர்

சித்திரைவைகாசி யாடி சிறந்தவா வணியு மிக்கு
வைத்தவைப் பசிதன் ஞேடு மன்னுகார்த் திகையுந் தானுந்
தைத்திங்க ளோடு மாசி தானிவை யெட்டு மாதம்
புத்தியா மனைகள் கோலப் புகழுனன்மை யாமே.

13. சித்திரை வையாசி ஆடி சிறந்த ஆவணியுமிக்க
வத்தவர்பசி னொடுமண் ணுகார் திகையதானுந் தீதிலாத்தை
மாசிதானிவை எட்டு மாதம்பத்தியா மனைகள்
கோல புகழுடன் நன்மை யாமே.

என்பது: மனைகோல நல்ல மாதம் சித்திரை வைகாசி ஆடி ஆவணி அர்பசி கார்த்திகை தை மாசி இந்த எட்டு மாதமும் திசை மாதமென்று பேராம். இந்த மாதங்களிலே குடிபுகுதல் மனைகோல நல்லது

சிவமயம்

---